சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 17] 1966-ஆம் ஆவணி-மீ 1-ம் உ (17-8-66) [ இதழ்

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை


# குமரகுருபரன்

மலர் 17 | பராபவஹ ஆவணித் திங்கள் 1ம்உ [17-8-66] | இதழ் 8


# நீதிநெறி விளக்கம்

(கட்டுரை 3)


தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம்

**சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்**

ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலயம்,

காஞ்சிபுரம்.


---


[மலர் 17, இதழ் 3-ன் தொடர்ச்சி]


தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கும்
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி — நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது.

கல்வி, கற்கத் தொடங்குங் காலையில் துன்பம் விளைப்பதாய், (கற்றலிற் சுவையும் கல்வியின் பயனும் அறிவின் வளர்ச்சியும் உணருங் காலம் முதலாக எழுமையும்) இன்பம் விளைப்பதாய் அறியாமையை ஒழித்து அறிவைப் பெருக்கும்.

நெடிதாகிய காமம் முன்னர் விளைக்கும் சிறிதாந் தன்மை யுடைய இன்பத்தினும் பின்னர்த் துன்பம் பெரிது விளைக்கும்.

கற்றலின் முன்னதாகிய அறியாமையே துன்பத்திற்குக் காரணம். கற்றுணர வுணரத்தோன்றும் அறிவுடைமையே இன்பத்திற்குக் காரணம். "மடங் கொன்றறி வகற்றுங்கல்வி" என்றதன் தாற்பரியம் இதுவே.

இச்செய்யுளுள் முற்றுத்தொடர் இரண்டுள. அவற்றுள் கல்வியின் உயர்வை விளக்குவ தொன்று; காமத்தின் இழிவை அளந்து காட்டுவ தொன்று. முதலாவது தொடர்:- கல்வி தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும். மடங்கொன்று அறிவகற்றும் என்பது இத்தொடரில் 'கல்வி' என்பது எழுவாய். 'பயக்கும்', 'அகற்றும்' என்பன பயனிலைகள். இதனை இரு தொடராக் கொள்ளினும் எழுவாய் ஒன்றேயாம். இன்பம் பயக்கும் என்பதில் உள்ள பயனிலையை எதிர்கால முற்றெச்ச மாக் கொண்டுரைத்தலும் பொருந்தும். பயத்தல் என்பது பயனுக்குதல் என்னும் பொருளது. பயனை விளைப்பது கல்வி. அப்பயன் இன்பம் துன்பம் என இரு வேறும். துன்பமாய் என்னுமிடத்து துன்பம் பயப்பதாய் என்று கொள்ளல் வேண்டும். இன்பம் பயக்கும் என்றதால் துன்பம் பயப்தேயன்றித் துன்ப மாகாது கல்வி. தொடங்குங்கால் துன்பமாய் என்றதிலுள்ள ஆக்கச்சொல் கல்விக்குத்துன்பம் இயற்கையன்று என்பதை விளக்கிற்று. தொடங்குங்கால் என்றதால் பயிலுங்கால் இன் பமே பயக்கும்; துன்பம் சிறிதும் தோற்றுது என்பது விளங்கும். மடம் - அறியாமை. இஃது உயிர்களுக்குப் பொதுவாயது. கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமடம் வேறு. இது வேறு. நாமிருக்கும் மடம்வேறு. கொல்லுதல் - உடம்பினின்று உயிரை நீக்குதல் போன்று அறிவினின்று அறியாமையை நீக்குவது. கல்வி, மடத்தைக் கொன்று அறிவையகற்றும். கல்லாமை அறிவைக் கொன்று மடத்தையகற்றும்.

"அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்"

என்னும் திருக்குறளான் அஃதுணரப்படும். கல்லா வேந் தர்க்குக் கற்ற அமைச்சரது அறிவு கைப்பொருள் போலுதவும்

உண்மையை இக்காலத்தறிதலரிது. இத்திருக்குறளில் அறிவைக் கொள்ளுதலும் இந் நீதிநெறி விளக்கத்தில் அறியாமையை (மடத்தை)க் கொல்லுதலும் அறிவார் எக்கொலையை வேண்டுவரோ அறியேம். கொல்லுதல் - அழித்தல் என்னும் பொருட்டு. அறிகொன்று என்புழி அறிந்து சொல்லியாரது அறிவையுமழித்து எனப் பரிமேலழகர் உரைத்தமை காண்க. அறிவு தூக்கம் போல்வது. சித்த கருமம். அறிதல் தூங்குவது போல்வதொரு தொழில். அறியாமை, தூங்காமை போல்வதொரு தொழில் நிகழாமை. அவ்வறியாமையைச் செய்வது ஒன்றுண்டு. அஃது அறிவைப் பற்றிய தோர் அழுக்கு. அழுக்கை வடநூலார் 'மலம்' என்பர். சைவசித்தாந்தம் அம்மலத்தை 'ஆணவம்' என்னும். மடம் கொல்லல் என்ருல் ஆணவத்தை நீக்கல் என்பதாம். அறிவு அகற்றும் என்றதில் அறிவு என்பது, முற்குறித்த சித்தகருமம். அறிதலாகிய தொழிலன்று. வணக்கம், பழக்கம், அடக்கம், கலக்கம், தூக்கம், ஊக்கம் முதலிய பலவும் சித்தகருமங்களே. வணங்குதல், பழகுதல், அடங்குதல், கலங்குதல், தூங்குதல், ஊங்குதல், (ஊக்குதல்) முதலியன தொழிற்பெயர்கள். வணங்கினேன், வணங்குவேன் என்பனவும் இவ்வாறே பிறவற்றின் அடியாகப் பிறப்பனவும் வினைச்சொற்களாம். இவையனைத்தும் சித்த கருமங்களாகா. கல்வி என்பதும் சித்த கருமமே. கற்றல் தொழிற்பெயர். கல்வி தொழிற் பெயரன்று. வித்தையை உணர்த்தாது. வித்தையைக் கற்றல் என்ருல் வித்தைவேறு அதனைக்கற்றல் வேறு என்பது விளங்குமன்ரூே? செயல் கற்றலும் அச்செயற்படுபொருள் கல்வி (வித்தை)யுமாம். செயற்படுதல் - செயலின் பயனை அடைதல். "தொழிற்பயனுறுவது செயற்படு பொருளே" என்பது பழைய சூத்திரம். செயற்படு பொருளென்பதே செயப்படு பொருளென மருவிற்று. 'கல்வி'என்பது வித்தை என்னும் பொருட்டு. 'அறிவு' என்பது அவ்வித்தையான் வரும் 'ஞானம்' என்னும் பொருட்டு. அறிவு முத்திறப்படும்; தன்னறிவு, தன் தலைவன் - அறிவு, இவ் விரண்டுமல்லாப் பொருளறிவு என. தன்னறிவு - பசு ஞானம், தன் தலைவனறிவு - பதி ஞானம், ஏனையது பாசஞானம். "பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பறிய பரம்பரனைப் பரி ஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத நீழற்கீழ்

நில்'' என்னும் சிவாகம வசனம் தொடங்கி மூன்று திருவிருத்தத்தால் விளக்கப்படும். அம்மூவேறு ஞானத்தையும் உணர்க. சிவப்பிரகாசத்தில் ஞான நிட்டையை விளக்கும் திருவிருத்தத்தாலும் அறிக. சங்கற்ப நிராகரணம் முடிவில் பதி பசு பாச முதிரறிவுகள் எனத் தொடங்கும் திருவடிகளாலும் அம்மூன்று ஞான நிலைமைகளை உணரலாம்.

அகற்றும் என்பது பிறவினை. அகலும் என்பது அறிவிற்குரித்து. அகற்றும் என்பது கல்விக்குரித்து. கல்வி அறிவை அகற்றும். கல்வியால் அறிவகலும். அகலுதல் – விரிதல் என்னும் பொருட்டு. விரித்தால் விரியும் தொகுத்தால் தொகும் என்ன வேண்டும் இடத்தில் 'விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்' என்றது (புறம் 53) உணர்க. அகலம் என்னும் வழக்கும் "அறிவகற்றும் ஆகலூழ் உற்றக்கடை'' என்றதன் பொருளாக அறிவு சுருங்கியிருப்பினும் கைப் பொருளாதற் கேதுவாகிய ஊழ் வந்துற்றவிடத்து அஃது அதனை விரிக்கும் என்றெழுதிய பரிமேலழகர் உரையும் வழக்கும் காண்க. அறிவு அகன்றோர் – அறிவு அகலப் பெற்றோர். விரிந்த அறிவினர் எனக் கொள்ளல் வேண்டும். "களிறு சென்று களன் அகற்றவும்'' (புறம் 26) "விலங்கு அகன்ற வியல்மார்ப'' (புறம் 37) என்றமை காண்க. "வியலென் கிளவி அகலப்பொருட்டே''. 'அகன்றவியல்' என்றது விரிவுமிகுதியை யுணர்த்தி நின்றது போலும். அறிவு நீங்கினவர் எனக் கொள்ளலாகாது. நீங்குதல் என்பதற்கும் நீளுதல் என்ற பொருளே உரித்து. நீளுதல் - நீள்குதல் என்னுமிரண்டும் ஒரு பொருளன. முதனிலையும் அம்முதனிலையின் வினைவுகளும் (அடியாகப் பிறப்பனவும்) வேறுபடலாம். படினும் தன்மை வேறுபடாது. நீள்கு என்பதன் மருவே நீங்கு என்பது. இதனை,

"நீங்கிற் றெறூஉம் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்''

என்னும் திருக்குறளில் குறுகுதற்கு மறுதலையாக நீள்குதலை வைத்தமையும் நீள்குதலும் நீங்குதலும் ஒன்றென்பதும் 'அகலுதல்' என்னும் பொருள் அதற்குண்டென்பதும் அங்குக் கொள்ளத்தக்க கருத்து வேறுபாடும் அறிதற்பாலன. அகற்சி காலம்

இடம் பொருள் முதலிய பலவற்றிற்குமுரித்து. இடத்தின கற்சியைக் "கண்ணகன் ஞாலம்" என்பதால் அறிக. பிறவற்றினகற்சிக்கு எடுத்துக்காட்டுக்களை இலக்கியத்தில் ஆராய்ந்து கண்டு கொள்க. அகல் என்னும் முதனிலை ஆல் எனத் திரிதலுமுண்டு. அகழ் ஆழ், துகள் தூள், இயல் ஏல், எனில் ஏல் என்பன முதலிய சொற்களான் அத் திரிபுண்மை விளங்கும். அகலம் ஆலம் (மயில் தோகை) அகலும், மயில், ஆலும் அகழம் ஆழம், நிகளம் நீளம், இயற்கை ஏற்கை, இயற்கை யெனவே – ஏற்கெனவே அறிவானெனில்,

அறிவானேல்,

"எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேன்
மற்றன்ன செய்யாமை நன்று"

என்பனவற்றுலும் அத் திரிபுண்மை விளக்கம் பெறும். அகலற் காரணம் பற்றியே ஆலம் ஆல் என்னும் ஒரு பெரிய மரப் பெயராயிற்று.

"தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை............
மன்னர்க்கிருக்க நிழலாகும்மே"

என்ற வெற்றி வேற்கைக் கண்ணியும் அக்காரணப் பொருளைக் காட்டும்.

அகன்று என்பது ஆன்று எனவும், அகன்ற என்பது ஆன்ற எனவும் திரிந்து வரும். "அரனறிந்து ஆன்று அமைந்த சொல்லான்" "அரசனுல் செய்யப்படும் அறங்களை அறிந்து தனக்கேற்ற கல்வியுடன் நிறைந்து அமைந்த சொல்லை யுடைய வன்" (குறள் 635).

"ஆன்றுஅவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர்" (புறம் 191) என்றதற்குரைத்த இரண்டனுள் ஒன்று, கல்வியால் நிறைந்து அதற்கேற்பச் சுவை முதலியவற்றிற் செல்லும் அறி வறிந்து மனமொழி மெய்களானடங்கிய சான்றோர் என்பதாகும். அதில் 'ஆன்று' என்பதற்கு நிறைந்து என்று பொருளுரைத்தமை காண்க. "எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும் ஆன்ற பெருமை தரும்" (குறள் 416).

"ஆள்வினையும் ஆன்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையான் நீளும் குடி"

என்னும் திருக்குறளுரையுள் நிறைந்த என்னும் பொருளுரைத்த லும் ஆன்ற என மருவியமையும் உணரப்படும்.

அகல் அகன் என்னும் இரண்டும் வடிவில் வேறுபடினும் பொருளி லொன்றே. அவற்றிற்குப் பொருள் கொண்டார் அவ் வொற்றுமை அறியாது சொல்லை யாளவும், பொருளை யுரைக்க வும் புகுந்து பிழைத்தனர். அகன் என்பது ஆன் எனத் திரிந்து முதனிலையாய் நின்று அதன் வினை விகற்பங்களுள் ஆன்று, ஆனு, ஆனது என நின்று அடங்குவனவும் உள.

"நன்றும் முயங்கல் ஆன்றிசின் யானே" (புறம் 151 என்ற விடத்து யான் முயங்குதல் நிறைந்தேன் என்பதே பொருள். ஆண்டு 'அமைந்தேன்' என்று பொருளுரைத் தாலும் நீங்கினேன் என்று பொருள் பயவாது. அதன் எதிர்மறையாய் உள்ள ஆனது ஆனு என்பவை அமையாது அமையாத என்னும் பொருளனவாகக் கொள்ளப்பட்டன. ஆங்கு, ஓரளவுக்கு அமையாது விரிந்து பெருகின; பரவின என்னும் பொருளவாய் நின்றன. ஆனுவீகை-வரையறைப்படாது பெருகிய ஈகை. ஆனு வறிவு வரையறைப்படாத பெருகிய அறிவு.

"ஆனு வறிவா யகலா அடியவர்க்கு வானுடர் காணுத மன்" என்னும் திருவருட் பயனுனும் அறிக. ஆனுவறிவு - வரையறைப் படாத வியாபக ஞானம். அகன்ற ஞானம் என்பதே அதன் கருத்து. ஆனுதல் என்னும் ஒரு தொழிற் சொல்லின்மை யறிக.

"நெடுங்காமம் முற்பயக்கும் சின்னீர் வின்பத்தின் பிற் பயக்கும் பீழை பெரிது." என்பது இரண்டாவது தொடர். "முற்றிழாய்" என்பது மகடு முன்னிலை. முற்றுதல் இழைத் தற்றெழில் முதலியவற்றின் மேற்று. நீதி நூல்கள் மகடூஉவை முன்னிலையாக்கி உபதேசிக்கும் மரபு வழிப்பட்டவை. நாலடியார் நன்னெறி முதலியவற்றிற் காண்க. இத்தொடர் விளக்கம் எம்மாலெழுதப்படத்தக்கதன்று; பூர்வாசிரமத்திற் கான்ற சோறெனக் கழித்ததாதலின். தொண்டரடிப் பொடியாழ்வார்

யாத்த திருமாலையில் மூன்ருவது மலரில் பத்தொன்பதாவது இதழாக நின்ற அஃறிணைச் சுட்டுச் சொல்லுக்கு யௌவநம் எனப் பொருள் குறித்து அதனை அஞ்சிய திவ்வியபிரபந்த விரிவுரை யாளரினும் யாம் அஞ்சுதும்.

பீழை என்பதற்குத் துன்பம் வருத்தம் என்னும் பொரு ளுரைத்தனர் பரிமேலழகர், நச்சினுர்க்கினியர் முதலியோர்.

சிந்தாமணியாசிரியர் இச்செந்தமிழ்ப் பழஞ்சொல்லை ஈரி டத்தில் ஆண்டிருக்கின்ருர். திருவள்ளுவர் மூவிடத்தில் வைத் தும் அது காரணப் பெயராதலை ஈரிடத்தில் குறித்தும் அருளினுர். திருக்குறள் தொன்னூல் என்பதும் அதனை அடுத்துக், காவி யங்களுள்ளே சீவக சிந்தாமணி பழைமைத்து என்பதும் உண் மையே. அவற்றின் ஆசிரியர் இருவரும் இதைத் தமிழ்ச்சொல் என்று கொண்டு ஆண்டதை எவரும் மறுக்க மாட்டார். மாட்டாமை, பின் வரும் விளக்கத்தால் வெளிப்படும்.

'பீழை தான் பொறுக்க' என்று (சிந்தாமணி 1120) வரும் தொடர்ப் பொருள் விளக்கத்தில் நச்சினுர்க்கினியர் 'பீழைவிகாரம்' "குற்றத்தைப் பொறுப்பாயாக" என்றெழுதினுர். பதிப்பாசிரியர் குறிப்பில், 'பிழை என்பது பீழை என நீட்டல் விகாரம் பெற்றது என்றும் பீழை – குற்றத்தை' என்றும் எழுதியிருக்கின்றமை நச்சினுர்க்கினியர் உரைக்கு ஒத்ததே.

'பீழை செய்து பெற்றனன்' (சிந்தாமணி 580) எனத் தொடங்கும் பாட லுரையில் 'பீழை செய்து நின் நட்பைப் பெற்றேன்' என்றுரைத்தார். பீழை என்றதன் பொருள் அதன் முன்,

"துன்பமுற்றவர்க்களால் இன்ப மில்லை யாதலின்
அன்பமற்று யான் நினைத் துன்பத் தாற் றெடக்கினேன்."

என்ற பாட்டில் விளக்கப்பட்டமையால் அச் சொல்லையே உரை யிலும் கொண்டார் நச்சினுர்க்கினியர். இங்குப் பெயர்க் காரணமோ பிறிதொன்றுமோ எழுதிற்றிலர். 'பீழை விகாரம்' என்ற நச்சினுர்க்கினியர் கருத்துயாது? பிழை என்பது பீழை

முதனிட்சியுற்றது என்றதன்றி வேறில்லை. துன்பங்கட் கெல்லாம் பெரிதும் காரணம் பிழையே யாதலின் துன்பத்தைப் பிழை என்றனர். அது முதலுயிர் நீண்டொலிக்கப் பீழை என்றாயிற்று. ஆயினும் 'பீழித்தல்' என்றே ஒரு தொழிற்பெயர் இருப்பதால் 'பீழ்' என்ற முதனிலையடியாகப் பிறந்ததெனக் கோடலே தக்கது. திருவள்ளுவர்,

"அறிவில்லார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது"

"நனவினான் நல்காக் கொடியார் கனவினான்
என்எம்மைப் பீழிப் பது"

(843, 1217) என்ற திருக்குறள்களாலுணர்க. இவற்றால் 'பீழித்தல்' என ஒரு தொழிற் பெயருண்மை யுறுதியாயிற்று. "பீழை தரும்" "பீழை தருவதொன்றில்" (திருக்குறள் 658, 839) என்புழி அத்தொழின் முதனிலையடியாகத் தோன்றிய ஐயீற்றுப் பெயரையும் ஆண்டருளினார். "பீழிக்கும் பீழை" என அப்பெயர்க்காரணத்தையும் தோற்றி யருளினார். பரிமேலழகர்,பீழை என்பதற்குத் துன்பம் வருத்தம் எனப் பொருளுரைத்தமையும் உணர்தற்பாற்று. "பீழிக்கும், பீழை = வருத்தும் வருத்தம்." "பீழிப்பது – துன்பமாகா நின்றது; வருத்துவது."

இவற்றால் பீழித்தல் 'பீழிப்பது' பீழை என்பவை தமிழ்ப் பழஞ்சொல் என்பது உறுதியாயிற்று, ஆயினும், இப் பீழையை ஒரு பொருளாகக் கொண்டு எழுதும் பீழையை யுற்றதன் காரணம் யாது என்று அறிஞர் பலர் வினவலாம்; அதற்கு விடை இது:- மொழிப் பற்றுண்மை புலவர்க்கியல்பே. அஃதில்லாமைக்கு அறியாமை காரணம். மொழிப்பற்று நியாயத்துட் படாதுவெறிப்பற்றாக இருப்பது பெருந்தீங்கு விளைக்கும்.எமக்கும் பல மொழிகளில் சில அநுபவம் உண்டு. ஏதேனும் ஒரு பாடையேறினோர் கைவிடா ஏடுகளின் உண்மைக்கு மாறுபாடும், வேறுபாடும் உறமொழிப் பொருட் காரணமும் மொழித் தோற்றமும் கூறியும் எழுதியும் தம் வெளிறு ஒளிறச்செய்வார் இன்றும் உளர். பள்ளிப் பாடங்களுக்குக் குறிப்புரை, விளக்க உரை, வினா விடை யெழுதிய பார்ப்பனச் சான்றோர் சிலர். அவற்றில் செந்தமிழ்ச்

சொற்களை யெல்லாம் வடமொழியின் வேர்ச்சொல்காட்டி மறைத்தனர். அவர்போல இப்பீழையையும் "பீடை யென்னும் வடமொழிச் சிதைவு: "நாடிகாவென்றது நாழிகை யென்று வந்தாற் போல" என்று நீதிநெறிவிளக்கத்துக் குறிப்புரையில் எழுதியருப்பதே காரணம். இவ்வளவு பீழை இதனை யெழுதுவதில் நேர்ந்தற்கு, எப்பாடை யேறினும் வடமொழிப் பாடை யேறினோர் இவ்வழக்கம் பெரிதுடையர். இவர் செயலை அறிந்த தமிழ்ப் பாடை யிலடிவைத்தோரும் பிறமொழிச் சொற்களைத் தமிழ் சொல்லாகக் கூறிச் சாதிக்கும் பெருங்குற்றம் செய்கின்றனர். உள்ளதை யுணர்தலும் உள்ளவாறு உரைத்தலும் உண்மை உணர்ந்தோதுவார்க் குற்ற கடனாகும். "விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்" என்ற புறத்தே யொதுங்கி, இவ்வளவில் நிற்போம். தெரிமாண்டமிழ்மும்மையும் விரிவாக் கற்றோர்க்கு இப்பீழை விரிவு பீழை யுண்டாக்காது. பாஷா, பாஷை, பாடை, பாழை என்றது போலப் பீடா - பீழை கொள்ளலும் பீழையே. இந் நீதிநெறி விளக்கத்தின் பிற்பகுதியாகிய பீழை, உலகில் எவ்வுயிரையும் பற்றுதொழிக. வாழையடி வாழையாகிய சிவ நெறியினின்று குறைவிலாது உயிர்கள் வாழ்க.

(தொடரும்)

---

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member, Legislative Assembly,
MADRAS-31.

மலர் 17. இதழ் 6-ன் தொடர்ச்சி

### The False Paths leadeth not to Param

### நெறியற்ற சமயங்கள் பரனைக்கூட்டா

119. நூறு சமயங்கள் உளவா நுவலுங்கால்,
ஆறு சமயம் அவ்வாறுட் படுவன;
கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லா;
ஈறுபரநெறி யில்லா நெறியன்றே.

Forsooth,
The Faiths here below are a hundred in number,
In that swollen stream are the Six Faiths too;
These Faiths taketh not to the goal they boast of;
They are true Faiths never
That taketh not to the Path of Param.

சமயங்கள் பலப்பலவாகப் பிரிந்துள்ளன: பேராறுபோல் அவை உள்ளன; அவற்றுள் அடங்கினவையே அறு சமயங்களும். இச்சமயங்களெல்லாம் முடிவாகக் கொண்ட நெறிக்கு பயன்படா. முடிந்த முடிவு பரனை அடையும் நெறியேயாகும். அதில்லா நெறியேதும் நெறியாகாது.

## The Contending Faiths but lead to the cycle of Birth and Death

## முரண்படும் சமயநெறிகளெல்லாம் பிறவிச் சுழியிலேயே ஆன்மாவை அழுத்தவல்லன

120. கத்துங் கழுதைகள் போலும் கலாதிகள்;
சுத்த சிவம்எங்கும் தோய்வுற்று நிற்கின்ற;
குற்றம் தெரியார், குணம்கொண்டு கோதாட்டிப்
பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே.

The Contending Paths are unto the braying asses:
The Pure Siva is all-pervasive:
The seeketh Him not by the right Path,
And so freeth not from impurities:
They shall grow insane
And for ever be entangled in the cycle of birth and death.

மாறுபடும் சமயநெறிகளின் உரையெல்லாம் கழுதைகள் கத்துவதற்கு ஒப்பாகும். பரசிவம் எங்கும் நிறைந்து நிற்கின்ருன். எனவே, நன்னெறியாம் சிவநெறியைப் பற்றி மலங்களையத் தெளிவு பெருதவர்கள் பித்துப்பிடித்ததுப் போன்று, வகைதெரியாது பிறந்திறந்து வருந்துவர்.

குறிப்பு:

வரி. 1 கலாதிகள் – பலவகையான கலைகள்; இங்கு சமயநெறிகள்
2. நிற்கின்ற – நிற்கின்றது; நிற்கின்ருன்-என்றும் பாடம்.
3. குற்றம் – மும்மலங்கள்
குணம் – நன்னெறியாம் ஞானநெறி.

'குணம் கொண்டு கோதாட்டி குற்றம் தெளியார்' என்று கூட்டவும்.

## To attain the Finite Goal the Co-operation of the Realised is needed

## ஞானம் பெற்றோர் துணையாலே ஏனையோர் இறுதி நிலை பெறலாகும்

121. மயங்குகின் ருரும் மதிதெளிந் தாரும்
முயங்கி, இருவினை முழைமுகப் பாச்சி

இயங்கிப் பெறுவரேல், ஈறது; காட்டில்
பயங்கெட் டவர்க்கோர் பரநெறி யாமே.

Those who are assailed by doubts
And those who are freed from doubts
When together commingle.
And drive the wild beasts of Karma twine to the caves.
And persevere in the pursuit
Then shall the Finite Goal be reached;
Those that are rid of the terrors of the wilderness
Shall see the Path that leads to Para.

சமயப்பிணக்குகளால் உண்மைகாணாது மயங்குகின்றவர்களும், மெய்ந்நெறி நின்று ஞானத்தெளிவு பெற்றாரும் ஒன்று கூடி, இருவினையாம் வனவிலங்குகளையும் குகைக்குள் விரட்டி உண்மையை நாடி உழைப்பார்களேயானால், அதுவே முடிவான நிலையை உய்க்கும். எவரொருவர் உலகியல் வாழ்வாம் காட்டில் எழும் அச்சத்தினின்று விடுபடுகிறார்களோ, அவரே பரனை அடையும் நெறியை அறிந்தவராகிறார்.

குறிப்பு:

வரி. 1 மதிதெளிந்தார் மயங்குகின்றவர்க்குக் குருவாய் நின்று வழி காட்டுவது கடன் என்பது வற்புறுத்தப்பட்டது.

வரி. 3-4 உலகியல் வாழ்வு ஒரு காடாகவும், அதிலுள்ள குகையில் இருவினையாக வனவிலங்குகளை விரட்டில் அச்சம் கெடுமென்று உருவகிக்கப் பட்டது.

(தொடரும்)



# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

## உரை நடை

பாலகவி வமிநாகரம்,
திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

(மலர் 17. இதழ் 7-ன் தொடர்ச்சி)

### வருகைப் பருவம்

செம்பொற் கருங்கழல் அரிக்குரற் கிண்கிணி
சிலம்பொடு கலின்கலினெனத்
திருவரையில் அரைமணி கிணின்கிணின் எனப்பொலந்
திண்டோளின் வளைகலிப்ப
அம்பொற் பகட்டுமார் பிற்சன்ன வீரமும்
ஆரமும் திருவில்வீச
அணிமகர குண்டலம் பருதிமண் டலமென்ன
அலர்கதிர்க் கற்றை சுற்றப்
பைம்பொற் சுடர்ச்சுட்டி கட்டுசூ ழியமுடன்
பட்டமொளி விட்டெறிப்பப்
பங்கய மலர்ந்ததிரு முகமண் டலந்தொறும்
பனிமுறுவல் நிலவரும்பக்
கும்பப் படாமுலை மலைப்புதல்வி செல்வக்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன் வருகவே. 52

பெரிய திருவடிகளில் செம்பொன்னாலாகிய தவளையொலி போன்ற ஒலியை யுடைய கிண்கிணி சிலம்புடன் சேர்ந்து கலின் கலின் என்று ஒலிக்கவும் அழகிய இடுப்பிலே உள்ள அரைச் சலங்கைமணி கிணின் கிணின் என்று ஒலிக்கவும் பொன் போன்ற வலிய தோள்களிலுள்ள வளைகள் ஓசை செய்யவும்

அழகிய பொன்னிறமான பெருமையை யுடைய மார்பில் உள்ள வீரசங்கிலியும் முத்தாரமும் இந்திரவில்லைப் போல ஒளி வீசவும் அழகிய மகர குண்டலங்கள் சூரிய மண்டலத்தைப் போலப் பரவுகின்ற ஒளித்தொகுதியை நிறைக்கவும் பசிய பொன்னு லாகிய ஒள்ளிய நெற்றிச் சுட்டி, கட்டப்பட்ட உச்சிக் கொண்டை யுடன் கூடிய நெற்றிப் பட்டத்துடன் கூடி ஒளியை விட்டு விட்டு விசவும் தாமரை மலர்ந்த திருமுக மண்டலங்கள் தோறும் குளிர்ந்த புன்முறுவலுடன் நிலவனைய பற்கள் விளங்கித் தோன்றவும் கும்பம் போன்ற கச்சணிந்த கொங்கைகளையுடைய மலைமகளாகிய பார்வதி தேவியினது செல்வக் குமார நாயகனே! வந்தருளுவாயாக. குரவம் மணக்கின்ற கந்தபுரியில் அருள் குடிகொண்டு விற்றிருக்கின்ற குமரகுருபரனே! வந்தருளுவா யாக.

மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல் வெண்துகில்
மடித்தலம் நனைப்பவம்மை
மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி யெம்பிரான்
மார்பினிற் குரவையாடி
முழவுமுதிர் துடியினிற் சிறுபறை முழக்கியனல்
மோலிநீர் பெய்தவித்து
முளைமதியை நெளியரவின் வாய்மடுத் திளமானின்
முதுபசிக் கறுகருத்தி
விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு தூளெழ
மிகப்புழுதி யாட்டயர்ந்து
விரிசடைக் காட்டினின் திருவிழிகள் சேப்பமுழு
வெள்ளநீர்த் துளையமாடிக்
குழவுமுதிர் செவ்விப் பெருங்களி வரச்சிறு
குறும்புசெய் தவன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன் வருகவே. 53

இளமை பொருந்திய கொவ்வைக் கனி போன்ற வாயி லிருந்து வழிகின்ற பசிய தேனூறல், வெள்ளிய ஆடையை அணிந்த அம்மையினது மடித்தலத்தை நனைப்ப, அவளது மணி வயிறு குளிரும்படியாகத் தவழ்ந்தேறிச் சென்று எமது தலைவ

ளுகிய சிவபெருமானது திருமார்பில் குரவைக்கூத்தாடி, முழ வினைப் போன்று ஓசை மிகுந்த அவரது திருக்கரத்திலே உள்ள உடுக்கையில் சிறுபறை ஒலியை எழுப்பி மற்றொரு திருக்கரத்தி லுள்ள நெருப்பைச் சடையிலுள்ள கங்கை நீரைப் பெய்து அவித்து அதிலுள்ள பிறைத்திங்களை அங்கே உள்ள நெளி கின்ற பாம்பின் வாயிலே புகுத்திக், கையிலே உள்ள இளமை யான மானினது கடிய பசிக்கு முடியிலே உள்ள அறுகம் புல்லை ஊட்டி மங்கலம்மிக்க சிவந்த திருமேனியிலணிந்த வெண்ணீறு தூளெழும்படி துளைந்து விளையாடி விரிந்த சடைக் காட்டிலே நின்று இரண்டு கண்களும் சிவக்கும்படி மிக்க கங்கை வெள் ளத்திலே குடைந்தாடிப் பிள்ளைமை முதிர்ந்த மேலான பெரிய மகிழ்ச்சி உண்டாகும்படி சிறு குறும்பு செய்தவனே! வந்தருளு வாயாக. குரவம் மணக்கின்ற கந்த புரியில் அருள் குடி கொண்டு வீற்றிருக்கின்ற குமரகுருபரனே! வந்தருளுவாயாக.

இருளற விமைக்குநின் திருவுருவின் அலர்சோதி
இளஞாயி றெனமுகையவிழ்ந்
தேடுவிரி தாமரைக் காடுமுகிழ் நகைநில
வெறிப்பவலர் குமுதவனமும்
கரைபுரள வலைமோது கடலைக் கலக்குமழ
களிறென வுழக்கியொருநின்
கண்மலர்கள் செம்மலர்கள் ஆகமோ கப்பெருங்
கலவியங் கடலின் முழ்கும்
வெருளின்மட நோக்கினீ ரரமகளி ருடனுடும்
விளையாட் டெனத்திரைபொரும்
வெள்ளநீர்ச் சரவணப் பொய்கையந் துறையினீள்
வீரர்கள் எனுங்கோளரிக்
குருளைக ளொடும்புனல் குடைந்துவிளை யாடிய
குமாரநா யகன்வருகவே.
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன் வருகவே. 54

இருள் நீங்கும்படி ஒளி வீசுகின்ற உன்னுடைய திருவுரு வத்திலிருந்து வெளிப்படுகின்ற பேரொளியை இளஞ்சூரிய னென்று நினைத்து அரும்பவிழ்ந்து இதழ் விரிகின்ற தாமரைக்

காடும் முகிழ்க்கின்ற புன்முறுவல் நிலவொளியை வீச அதற்கு மலருகின்ற குவளைக்காடும், கரைபுரளும்படி அலைமோதுகின்ற கடலைக் கலக்கும் இளங்களிறெனக் கலக்கி ஒப்பற்ற நினது கண்மலர்கள் செம்மலர்களாகும்படி மோகத்தைச் செய்கின்ற பெரிய கலவிக்கடலிலே முழ்கும் மயக்கத்தையுடைய இளம் பார்வையினராகிய நீரரமகளிரோடு ஆடுகின்ற விளையாட்டென்று சொல்லும்படி அலை மோதுகின்ற மிகுந்த நீரையுடைய சரவணப் பொய்கையினது அழகிய துறையில் பெரிய வீரர்களாகிய வீரவாகு தேவர் முதலிய சிங்கக்குட்டிகளுடன் நீர் குடைந்து விளையாடிய குமாரநாயகனே! வந்தருளுவாயாக. குரவம் மணக்கின்ற கந்தபுரியில் அருள் குடிகொண்டு வீற்றிருக்கின்ற குமர குருபரனே! வந்தருளுவாயாக.

(தொடரும்)

---

# பாட்டின் பொருள்

**பாட்டு**

பூவென்றால் அல்லியும், அரளியும், சண்பகமும், பாதிரியும், மல்லிகையும், முல்லையும் பூவாக இருப்பினும் அவைகளைக் குறியாது திருமகள் வாழும், சிறப்புடைய தாமரை ஒன்றையே குறிக்கும். அது போல பா – பாட்டு என்று சொன்னால் திருவாசகத்தைத்தான் குறிக்கும் என்பது சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய,

"செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூ ரன்ப
பாவெனப் படுவதுன் பாட்டு
பூவெனப் படுவது பொறிவாழ் பூவே",

என்னும் பாட்டால் உணரலாம்.

**திருவாசகம்.**

திருவாசகம் சைவத் திருமுறைகளுள் எட்டாவது திருமுறையாகத் திகழ்வது. சிறந்த ஞானக் கருவூலமாக இறைவன் சொருபமாகவே விளங்குவது. சிவஞானபோதம் எட்டாம் சூத்திரத்திற்கு இலக்கியமாக இலங்குவது. நமச்சிவாய வாஅழ்க. என ஐந்தெழுத்தில் தொடங்கி ஐந்தெழுத்தின் பெருமையையே விளக்குவது. இது அறுநூற்று ஐம்பத்தாறு பாடல்களைக் கொண்டது. இந்நாட்டாரேயன்றி மேல் நாட்டாரும் போற்றும்-தனிப்பெரும் சைவ சமய நூல் இது ஒன்றே. திருவாசகம் கேட்டால் கருங்கல் மனமும் கசிந்துருகும். திருவாசகம் இறைவனது அருள் வாக்காக இறைவனது கைப்படவே எழுதப் பெற்றது. சர்வ சங்கார காலத்தின் தனிமையை கழிக்க இறைவன் திருவாசகத்தின் ஒரு பிரதியை எழுதிவைத்துக் கொண்டான் என்பர் பேராசிரியர்.

மாணிக்கவாசக சுவாமிகள்.

“சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பனியான்” —

என்றும் ‘வாக்குன் மணி வார்த்தைக்கு ஆக்கி’ என்றும் ‘பேச்சிறந்த மாசில்மணியின் மணி வார்த்தை’ என்றும் குறிப்பிட்டிருப்பது திருவாசகம் இறைவன் வாக்கே என்பதை மெய்ப்பிக்கும். திரு என்பது சிவபெருமானைக் குறிக்கும். வாக்கும் வாசகமும் ஒன்றே சிவபெருமான் வாக்கு திருவாசகம். சிவபெருமான் வாக்காதல் சிறப்புப் பற்றியே திருவாசகம் என வழங்கிற்றெனினும் பொருந்தும். தில்லையில் அடியவர்கள் திருவாசகத்தின் பொருள் கேட்டபொழுது திருவாசகத்தின் பொருள் சிவபெருமானே என்று மாணிக்கவாசகரே சுட்டிக்காட்டியதாலும், திருவாசகம் இறைவன வாக்காதலாலும், திருவாசகத்துக்குப் பொருள் சொல்லலாகாது என்று பண்டைய சான்றோர் கருதினர். ஆம், திருவாசகத்துக்கு வெறும் இலக்கண இலக்கிய அறிவு கொண்டு மட்டும் பொருள் காண இயலாது. அவன் அருள் ஞானம் ஒன்றால் மட்டுமே திருவாசகத்துக்குச் சிறப்பென்னும் செம்பொருள் காண இயலும்.

சிவபுராணம்.

இது திருவாசகத்தின் முதல் பாடலாக அமைந்தது. தொண்ணூற்றைந்து அடிகள் கொண்ட கலிவெண்பாவால் அமைந்தது. பாட்டும் புராணமும் அதுவே. சிவனது அநாதி முறைமையான பழமையைக் கூறுவது சிவபுராணம். சிவபுராணம் சிவனது ஐந்தொழில் முதலிய விரிந்த புராணங்களில் கூறப்பெற்ற செய்திகளைச் சுருக்கிக் கூறுவது. இது ‘சிவபுராணம்’ என்பது பாடலிலேயே திருவருள் வாக்காக மாணிக்கவாசகரால் கூறப்பெற்றிருப்பது மேலே காட்டிய சிவபுராண வரிகளால் உணரலாம். கந்தனது விரிந்த புகழ் கூறும் கந்தபுராணச் செய்திகளனைத்தையும் சுருக்கி குமரகுருபரர் பாடிய கந்தர்கலி வெண்பாவைக் குட்டிக் கந்தபுராணம் என்று வழங்கும் வழக்காறும்

இக்கருத்துப் பற்றியே போலும். திருவாசகம் முழுதும் ஓதும் பயன் இந்தச் சிவபுராணத்தை ஓதினுலே உண்டுஎன்பது சான்றோர் கொள்கை. அஃது பின்னரும் விளங்கும்.

சொல்லிய பாட்டென்பது திருவாசகத்தையும் சிறப்பாகச் சிவபுராணத்தையும்,குறிக்கும். திருவாசகத்துக்குப் பதப்பொருள் தெரிவது மட்டும் போதாது. அதன் உண்மைப் பொருள் உணர வேண்டும்.

“பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானு மாணுப் பிறப்பு” — என்பார் திருவள்ளுவர்.

திருவாசகம் இறைவன் பொருள் சேர் புகழ் பாடுவது. அல்லற் பிறவி – தொல்லை இரும் பிறவி நீக்கி மீண்டும் பிறவா நெறி அளிக்க வல்லது. பிறவா நெறியளிக்க வல்லது (செம்பெருளே) சிவபரம் பொருளே. இதனை,

‘பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு’ —

‘கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி’ —

என்ற திருவள்ளுவர் வாய்மொழிகள் மெய்ப்பிக்கும். அவன் திருவடியே பொருளாவதென்று உணரும் உணர்ச்சியே செம்பொருளும் – மெய்ப்பொருளும் ஆகும். அதுவே திருவாசகம் கற்றதனுலாய பயன்.

தில்லையில் மாணிக்கவாசக சுவாமிகளையே அடியார்கள் திருவாசகத்தின பொருள்கேட்க,அவர் திருவாசகத்தின் பொருள் தில்லையம்பலத்தில் ஆடும் இறைவனே என்று சுட்டிக் காட்டினுர் என்பது புராணம். சிவப்பிரகாச சுவாமிகளும்,

‘பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்
மூழ்கிய புனிதன் மொழிந்தவா சகமே
வாசக மதற்கு வாச்சியந்
தூசக லல்குல் வேய்த் தோளிடத் தவனே’

என்று பாடியுள்ளார். எனவே சிவபுராணத்துள் ‘சொல்லிய பாட்டின் பொருள்’ என்பதில் பொருளென்பது சிறப்பாகச் சிவ

பெருமானையே குறிக்கும் என்பது திண்ணம். இஃது திருவாசகம் முழுவதற்கும் பொருந்துவது.

உலகியற் பொருளையே நாம் பொருளாகக் கருதிய போதி லும், சமய சாத்திர உலகில் பொருளென்பது சிவபெருமானையே குறித்ததைச் சைவத்திருமுறைகளாலும், பிற அருள் நூல்களா லும், உணரலாம். 'வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாயவே' என்பது சம்பந்தர் தேவாரம். ஈண்டுத் திருவாசகம் நமச்சிவாய வாஅழ்க' என்று தொடங்குவது நினைவில் கொள்ளத்தகும். அப்பர் சுவாமிகளும் 'மாமறைகள் சொன்ன துறைதொறும் துப்பொருளாயின......இன்னம்பரான் தன் இணையடியே' என்பார். 'சொல்லும் – பொருளும் நிறைந்த சுடர்' என்பது திருவிசைப்பா. சேக்கிழார் 'ஆயு நுண்பொரு ளாகிய வெளியே அம்பலத்துள் நின்ருடுவார்' என்று சிவபெரு மானைக் குறிப்பார். அபிராமி பட்டரும், 'சொல்லும் பொருளும் என நடமாடும் துணைவர்' என்று இறைவனைக் குறித்துள்ளார். 'சொற்கும் பொருட்கும் உயிராம் மெஞ்ஞானத்தின் தோற்றம்' என்றும் 'பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனும்' என்றும் குமரகுருபரர் கலைவாணியைக் குறிப்பிடுவதும் ஒரு வாற்ருன் நினைவு கூர்தல் பொருந்தும். இவற்றையெல்லாம் நன்கு சிந்தித்து பொருளுணர்ந்து சொல்லுபவர்களே செல்வர்.

**செல்வர்.**

"செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே" – என்ற விடத்துச் சம்பந்தர் சிவபெருமானைச் செல்வனென்ருர். செல் வத்தைத் தருபவனும் – உடையவனும் செல்வன். அப்பர் சுவாமி களும் 'சிவனென்று நானுன்னை எல்லாஞ் சொல்லச் செல்வந் தருவானே,'என்று பாடியுள்ளார். மாணிக்கவாசகரும் 'செல்வமே சிவபெருமானே'என்றருளியுள்ளார். எனவே, சொல்லும் பாட்டின் பொருள் சிவபெருமானே என்பதை உணர்ந்து அவன் கழலேத் தும் செல்வமே செல்வமாவது. அச்செல்வத்தினை உடைய வரே செல்வர். அவ்வருட் செல்வம்பெற்ற மாத்திரமே அவர்கள் சிவலோகத்தின்கண் சிவனடிக்கீழ் நிலைத்து மகிழ்ந்து உள்ளவ ராவர். பல்லோரும் பணிந்து ஏத்துக.

**தொகுப்பு.**

பாட்டென்பது திருவாசகம். திரு–இறைவன். இறைவனுல் அருளிச்செய்யப் பெற்றது திருவாசகம். திருவாசகம் முழுதும் படிக்க இயலாதவர்கள் சிவபுராணத்தையேனும் பொருளுணர்ந்து படித்தல் வேண்டும். திருவாசகம் முழுதும் படிக்கும் பயன் சிவபுராணத்தைப் படித்தாலே உண்டு. சிவபுராணத்துள் 'சொல்லிய பாட்டென்பது' சிவபுராணத்தையும் – பொருளென் பது' – சிவபெருமானையும் குறிக்கும். அதனை உணர்ந்து சொல்லு பவர்கள் சிவனருட்ச் செல்வர்கள்.

**முடிப்பு.**

சிவனருள் பெற விரும்பும் சைவ அன்பர்கள் நாடோறும் திருவாசகம் பாராயணம் செய்தல் வேண்டும். சிவனேயச் செல் வர்கள் திருவாசகத்தை அன்பாக என்புருக பாடுவாராகுக. பாடி ஆடுவாராகுக. அவன் திருவடிகளில் மலர் சூட்டுவாராகுக. சிவபெருமான் திருவடியைச் சேருவாராகுக. அதுவே அவன் திருவருளைப் பெறும் உபாயம், இந்த ஞான நூலின் துணைக் கொண்டு ஞானத்தால் அவனைக் காணலாம். ஒன்றரைக் கண்ணைக் காண வேண்டுமானுல் ஊனக்கண் இரண்டாலும் முடியாது. ஒற்றைக் கண்ணுகிய ஞானக் கண்ணுல்தான் காணலாம்.

"அவன் காட்டுவித்தால் யார் ஒருவர் காணுதாரே
காண்பார் யார் கண்ணுதலாய் காட்டாக்காலே"

அவனை "இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவ னிறைவன் என்றெழுதிக் காட்டொணுதே."

"பாடவேண்டும் நான் போற்றி நின்னையே
பாடி நைந்து – நைந்து உருகி நெக்கு – நெக்கு
ஆடவேண்டும் நான் போற்றி அம்பலத்து
ஆடும் நின்கழல் போது நாயினேன்
கூடவேண்டும் நான் போற்றி இப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீடவேண்டும் நான் போற்றி வீடு தந்து
அருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே."

---

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 17. இதழ் 7-ன் தொடர்ச்சி]

## III

## SUNDARAMURTI SWAMI

(Abbreviated as SUNDARAR)

71. முடியேனினிப்பிறவேன்பெறின்முவேன்பெற்றமூர்தீ
கொடியேன்பலபொய்யேயுரைப்பேனைக்குறிக்கொண்ணீ
செடியார்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளடிகேளுனக்காளாயினியல்லேனெனலாமே.

71. Henceforth for me no birth, no death,
    No creeping age, bull-rider mine.
Sinful and full of lying breath
    Am I, but do Thou mark me Thine.
Venney-nallur, in "Grace's shrine"
    South of the wooded Pennai, there
My Master, I became all thine;
    How could I now myself forswear.

—— (To be continued)

---

# இசையும் இறைவனும்

திரு. ப. நா. பாலசுப்பிரமணியன் அவர்கள், பி. எஸ்சி.

இணையில்லாத மானிடப்பிறவியில் நமக்கு மனமகிழ்வுதரும் சாதனங்கள் அநேகம் உள. அவற்றுள் உன்னதமான இடம் பெறுவது இசையே! இசையில் ஈடுபாடில்லாத மக்கள் இவ் அவனியில் இல்லையென்றே இயம்பலாம்! இசையின் பெருமை அத்தகையது! பக்திப் பெருக்கூட்டும் பாடல்களைப் பண்ணோடு, வல்லார் பாடும்போது நம்மை யறியாது உணர்ச்சி மேலீட்டால் இசையின்பத்தில் ஈடுபடுகின்றோம்; மெய்ம்மறந்தவராய் இசை யின்ப வெள்ளத்தில் மூழ்கி இணையில்லாத இன்பம் துய்க் கின்றோம்! இசையால் நாம்பெறும் இன்பத்தை வார்த்தைகளால் வர்ணிப்பதென்பது இயலாத காரியம்!

## இசையின் பெருமை :

இசை இணையில்லாச் சிறப்புடைய ஒன்று. மக்களை வரையும் தன்பால் ஈர்க்கும், மயக்குறச்செய்யும் மாண்புறு குணம் கொண்டது இசை! மனிதர்களன்றி எத்தனையோ ஜீவ ராசிகள் இசை காரணமாக எண்ணற்ற பயன்கள் பெறுகின்றன! இசையினல் பயிர்கள் அமோகமாக விளைவதாக ஆராய்ச்சி அறிவிக்கின்றது! இசையைக்கேட்கும் மாடுகள் அதிக அளவு பால் தருவதாக அண்மையில் வெளியான செய்தி செப்புகிறது!

கோங்கரும்பு சுரபுன்னை குரவோர் சோலைக்
குழாவரி வண்டு இசைபாடும் பாடல்கேட்டுத்
தீங்கரும்பு கண்வளரும் கழனி சூழ்ந்த
திருக்கோவை லூரதனுள் கண்டேன் நானே........

என்பது திருமங்கை யாழ்வாரின் பாடல்,

வண்டுகள் தேனைப்பருகிரீங்கார இன்னிசை எழுப்ப, அந்த இசையைக்கேட்டு கரும்புகள் நாளும் நீண்டு வளர்ந்ததாக நவில்கின்றது பாடல். என்னே விந்தை! இதனுல் இசையால் பயிர் வளரும் என்ற உண்மை பண்டைத் தமிழகத்தில் நிலவி வந்ததை நாம் அறிய முடிகிறது.

வயலின் இசையைக் கேட்பதால் நமது தலையிலுள்ள உரோமங்கள் நீண்டு வளர்வதாக அண்மையில் அமெரிக்க ஆராய்ச்சியாளர்கள் கண்டறிந்துள்ளனர்! (வழுக்கையாளர்கள் கவனிக்க!)

இசையின்பத்தில் ஈடுபடுவதால் நாம் மனக்கவலை மறந்து மனமகிழ்வு பெறுகின்ருேம். உள்ளத்தின் மென்மையான உணர்வுகளைத் தூண்டிவிடும் பெருமை இசைக்கு உண்டென மேலை நாட்டு அறிஞர் மொழிவர்!

இசையில் ஈடுபடாத மனிதன் இவ் அவனியில் இருக்க வியலாது! இனிய நல் இசையைக்கேட்டும் இளகாத நெஞ்சுடைய மனிதன் தீயவனென்றும் அவன் மிகவும் துன்பமடைவான் என்றும் ஆங்கில நாடகாசிரியர் ஷேக்ஸ்பியர் செப்புவார்! அந்த ஆங்கிலப் பாடல் இதோ —

The man that hath no music in himself,
Nor is not moved with concord of sweet sounds,
Is fit for treasons, strategems, and spoils;
The motions of his spirit are dull as night,
And his affections dark as Erebus
Let no such man be trusted!

இனிய நல் இசையைக் கேட்டு இளகாத நெஞ்சுடைய மனிதனை நாம் நம்பலாகாதென நவில்கின்ருர் புலவர்!

இத்தகைய இனிய இசைக்கும் எல்லாம் வல்ல இறைவனுக்கும் மிகநெருங்கிய தொடர்புண்டு! அவற்றை இங்கு கண்டு களிப்போம், வாருங்கள்.

**நாதோபாசனை :**

இறைவனையடைய அநேகவிதமான வழிகள் உண்டென்பது பலரும் அறிந்த உண்மை. 'இறைவன் இசைவடிவானவன்,

எனவே இசையில் ஈடுபடுவதன் வாயிலாக இறைவனை வழுத்தி அவனோடு கலந்து பேரின்பம் பெறலாம்' என்றெண்ணி இசையை வழிபட்டு இறைவனுடன் இரண்டறக்கலந்தவர் எண்ணற்றவர். இவருள் சங்கீதமேதை தியாகராச சுவாமிகள் குறிப்பிடத்தக்கவர். இசை ஒன்றினையே தமது உயிராகப் பாவித்து உயிர் வாழ்ந்த உத்தமர் தியாகராச சுவாமிகள். எண்ணற்ற இனிய இசைப் பாடல்களை இயற்றி அவற்றை உளமுருகப் பாடிப் பரவி யாண்டும் இறைவனை வழிபட்டார். இறைவனை, இசைவழிபாடு என்ற 'நாதோபாசனனை' வாயிலாக வழுத்தி அவனருளால் அவனோடு இரண்டறக்கலந்தவர் தியாகராச சுவாமிகள். இதனால் 'நாதோபாசனை' என்ற இசை - வழிபாடு வாயிலாகவும் நாம் இறைவனை வழிபட்டுப் பேரின்பம் பெறலாம் என்ற உண்மை புலனாகிறது.

### இறையும், இசையும் :

இசைக்கும் இறைவனுக்கும் மிக நெருங்கிய தொடர்புண்டு. இறைவனே இசைவடிவிலிருந்து இணையில்லாத இசையின்பம் நமக்கு நல்குவதாகவும் நாம் நம்பலாம்! இசையே இறைவன்; இறைவனே இசை!

ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக்கு உடனாகி,

என்ற தேவாரவரிகள் இறைவன் இசைவடிவானவன் என்று தெள்ளத்தெளிய நிருபிக்கின்றன.

தமிழின் நீர்மை பேசித்தாளம் வீணைபண்ணி நல்ல
முழவம் மொந்தை மல்கு பாடல்செய்க இடம்ஓவார்
குமிழின் மேனிதந்து கோல நீர்மையது கொண்டார்
கமழும் சோலைக்கானூர் மேய பவள வண்ணரே.

இசைக் கருவிகளின் இனிய நாதத்தில் மெய்ம்மறக்க இறைவன் அவ்வினிய நாதம் தோன்றுமிடத்தில் இருப்பார் என்றியம்புகிறது பாடல். இனிமையான ஓசையாம் இசையில் இறைவனுக்குள்ள ஈடுபாடு இதனால் நன்கு புலனாகிறது.

இசையில் ஈடுபட்டவர்களுக்கு தனிப்பட்ட கருணைகாட்டும் தகைமையாளன் இறைவன்!

விளக்கிஞற் பெற்ற இன்பம் மெழுக்கிஞல் பதிற்றிஆகும்,
துளக்கில் நன்மலர் தொடுத்தால் தூய ஏறலாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்,
அளப்பில கீதஞ் சொன்ஞர்க்கு அடிகள்தாம் அருளுமாரே.

என்றதஞல் இனிய கீதங்களை இசைப்பதால் அளப்பரிய நன்மைகளை யடைவது திண்ணம்!

மேலே கண்டவற்றின்படி இறைவன் இசைவடிவன்; இசையே இறைவன், இறைவனே இசை, எனவே இசையில் ஈடுபடுவது மறைமுகமாக இறைவனை வழிபடுவதாகும் என்று அறியலாம்.

## நாத்திகரும் ஆத்திகரே!

இதேதடா புதிய சித்தாந்தம் என்றெண்ணி வியக்கவேண்டாம். இசையில் ஈடுபடாத மனிதவுயிர்களே இல்லையென்று முன்னர் கண்டோமல்லவா? இசையில் ஈடுபாடுடையவராயிருப்பது ஒருவகையில் இறைவனை வழிபடும் செயலே ஆகும்! எப்படி? இசையே இறைவன்; இறைவனே இசை. எனவே இசையில் ஈடுபடுதல் இறைவனிடத்தில் ஈடுபடுவதற்கு ஒப்பானது. நாத்திகர்களும் மனிதர்கள்தானே? அவர்கள் இசையில் ஈடுபாடில்லாமல் இருக்சமுடியாதே! இதஞல் அவர்கள் இறைவனிடத்தில் ஈடுபாடுடையவர்களாக எண்ணப்பட வேண்டியவர்களே. இறைவனிடம் ஈடுபாடுடையவர்களாததால் நாத்திகரும் ஆத்திகரே! எப்படி என்வாதம்?

## ஒரு வார்த்தை!

இறைவனிடம் நேரடியாகப் பக்திசெலுத்த முடியாவிடினுங் கூட இசையில் நாம் இயல்பாகவே ஈடுகொண்டிருப்பது திண்ணம். இசையில் நாம் ஈடுபாடுகொண்டிருப்பது இறைவனிடம் பக்தி கொள்வதற்கு ஒப்பானது. இதஞல் இறையருள் வாய்க்கப் பெற்று இன்பகரமான வாழ்க்கை நமக்குக் கிட்டுவது நிச்சயம். எனவே இசையில் ஈடுபாடு கொள்ளுங்கள்; இறையருள் கிட்டும். யாண்டும் இன்பமாய் வாழலாம்.

---

# புராண படனம்

[மலர் 17, இதழ் 7-ன் தொடர்ச்சி]

**சரித்திரமும் புராணமும்**

சரித்திர உணர்ச்சி நமக்கு இல்லை என்று சிலர் சொல்வது வழக்கம். இக்காலச் சரித்திரத்திலே சாதாரணமாகக் காணப் படுவது என்ன? போர் நிகழ்ந்ததைப் பற்றியும் இந்த இந்த அரசர்கள் இருந்தார்கள் இறந்தார்கள் என்பதைப் பற்றிய பட்டியலையுந்தான் காண்கிறோம். குறைந்தது ஐந்தாறு போர் களாவது இல்லாவிட்டால் அது சரித்திரமாகக் கருதப்படு வதில்லை. இந்த இந்தப் புலவர்கள் இருந்தார்கள், நாடு வளர்ந் தது என்று சொல்வதில்லை சரித்திரங்கள். மக்களுடைய ஒழுக் கம் வளர்ந்ததை இக்காலச் சரித்திரம் காட்டுவதில்லை. போர் நடந்த குறிப்புகளைச் சரித்திரமாகப் பாதுகாக்கின்றதை இந்த நவநாகரிக உலகத்தில் காண்கிறோம். அப்படிப் பாதுகாப்பது தவறு அல்ல. ஆனால் நம்முடைய பழங்காலத்து மக்கள் வாழ்க் கைக்குப் பயன்பட்ட பழைய சரித்திரமாக இருக்கும் ஒன்று இன்றைக்கு எந்த வகையில் நமக்குப் பயன்படும் என்று உணர்ந்து அதைச் சொல்லும் வகையில் சொன்னார்கள்.

பழைய பொருள் என்று அதை அப்படியே வைத்துப் பாது காப்பது என்பது ஒன்று. அதை நமக்குப் பயன்படுகிற வழியில் உபயோகித்துக் கொள்வது ஒன்று. மோகஞ்சதாரோவில் கிடைத்த பெரிய பாண்டம் மியூசியத்தில் வைப்பதற்குரியது. ஆனால், அன்றாடம் செய்யப்படுகிற பாண்டங்கள் நம்முடைய தினசரி வாழ்க்கைக்குப் பயன்படுவன. அதேபோல், புராணங்கள் தத்துவத்தை உள்ளடக்கியவை. இன்றும் பயன் படுகிற புதுமை உடையன. தோற்றத்தால் புராணங்கள் பழைமையுடையன; அவற்றுள் சொல்லப்படும் மூலக்கருத்துகளை உணர்ந்தால் அவை இன்றும் பயன்படும் புதுமை உடையனவாகத் தோற்றும்.

---

'சிவதொண்டன்' ஆசிரியர் அனுமதி பெற்று இந்த கட்டுரை பிரசுரிக் கப்படுகிறது.

**கதையும் உட்பொருளும்**

இந்தக் காலத்தில் கதைகளைப் படிக்க யாரும் சோம்புவது இல்லை. கதைகளில் உள்ள பாத்திரங்கள் கற்பனை என்று தெரிந்திருந்தும், அவைகளிலுள்ள நிகழ்ச்சிகளும் கற்பனையே என்பதை உணர்ந்திருந்தும், பலர் தங்களுடைய வேலைகளையெல்லாம் விட்டுவிட்டுக் கதைகளைப் படித்துக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். அப்படிப் படிக்கும்போது கதைகளிலுள்ள பாத்திரங்களின் இயல்பை ஆராய்கின்றார்கள்; மூலக் கருத்தைத் தெரிந்து பாராட்டுகிறார்கள். அந்தக் கதைகளைப் பார்க்கும் போது போட்டுக்கொள்ளுகிற கண்ணாடி எதுவோ அதையே போட்டுக்கொண்டு புராணக் கதைகளை அவர்கள் பார்ப்பது இல்லை. பார்க்கத்தெரியவில்லை என்று சொல்வதைவிட அவர்களுக்கு மனம் இல்லையே என்று சொல்வதுதான் பொருந்தும்.

கட்டுக்கதையைப் படித்து, அதிலுள்ள கருத்தை அறிய முற்படுகிறவர்கள், இந்தப் புராணக் கதையை – பெரியோர்கள் போற்றி வந்த கதையை-என்றோ தோன்றின கதையைப் படித்து அதில் உள்ள கருத்தைப் போற்றுவதற்கு மனம் கொள்வதில்லை. மனம் இல்லையே அன்றி வழி இல்லாமல் இல்லை.

**காதலியின் கடிதம்**

இருபத்தைந்து வயதுடைய கட்டிளங்காளை ஒருவன் தன்னுடைய மாமன் மகளைக் கல்யாணம் செய்து கொண்டான். அழகி என்றும் பண்புடையவளென்றும் மணந்து கொண்டான். அந்தக் காளை மெத்தப் படித்தவன்; தமிழ் அறிவு உடையவன். இலக்கியங்களைப் படித்தவன்; முத்து முத்தாக எழுதுபவன்; அந்த மடமங்கையோ மூன்றாவது வகுப்புவரைதான் படித்தவள். திருமணத்துக்குப் பிறகு தன்னுடைய தாய் வீட்டுக்குப் போய்ச் சில காலம் இருந்து வருகிறேன் என்று சென்றாள் அவள். தாய் வீட்டில் இருக்கும்போது தினமும் தனக்கு ஒரு கடிதம் போட வேண்டுமென்று சொல்லியனுப்பினான் அவன். ஊருக்குப் போனபின் அவன் தினமும் ஒரு கடிதம் எழுதினான். தன்னுடைய புலமையையெல்லாம் வைத்துக் கடிதம் எழுதினான். ஆனால் அங்கிருந்து ஒரு கடிதங்கூட வரவில்லை. தன் கண

வனுக்குக் கடிதம் எழுத வேண்டாம் என்கின்ற எண்ணம் அவளுக்கு இல்லை. அவள் படியாத மங்கை. தினமும் பேனாவை எடுத்துக் கடிதம் எழுத நினைத்துப் பிறகு என்ன எழுதுவது என்று தெரியாமல் வைத்து விடுவாள். அவனோ தினந்தோறும் தபால்காரர்களை எதிர்நோக்கி ஏமாந்து போனான்.

ஒருநாள் 'இத்தனை கடிதங்கள் எழுதுகின்றோமே; ஒன்றுக்காவது பதில் இல்லையே; நாம் என்ன வேலையற்றா இருக்கிறோம்?' என்ற உணர்வு ஏற்பட்டுக் கோபமாக ஒரு கடிதம் எழுதினான். அந்தக் கடிதத்தைப் பார்த்த அந்தப்பெண் எப்படியாவது ஒரு கடிதம் எழுதிவிடவேண்டுமென்று முடிவு செய்து அரும்பாடு பட்டு ஒரு கடிதம் எழுதினாள். அதாவது "அநேக நமஸ்காரம் ஷேமம் ஷேமத்திற்குப் பதில் தங்கள் உடம்பை நன்றாகப் பார்த்துக் கொல்லவும்" என்று நிறைய எழுத்துப் பிழைகளுடன் எழுதி அனுப்பி விட்டாள்.

தபால்காரர் கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தார். கடிதத்தை வாங்கிக்கொண்டு, அவன் பூரிப்படைந்தான்; களிப் படைந்தான்; தனியே அமர்ந்து படித்து இன்புற்றான். அதி லுள்ள குற்றங் குறைகள் அவனுடைய கண்களுக்குப் புலப் பட்டனவா? இல்லை. கடிதத்தில் அவனுடைய அன்பிற்குரிய மனையாளின் கையெழுத்தைக் கண்டான்; அதை எழுதின கரத் தைக் கண்டான்; கையை உடைய திருமேனியைக் கண்டான்; அவள் உள்ளத்தையும், அந்த உள்ளத்தில் சுரக்கும் காதலையும் கண்டான்; தங்கள் இரண்டு உள்ளங்களையும் பிணைக்கும் மின் சாரக் கம்பியாக அந்த கடிதத்தைக் கண்டான். அதனால் எழுத் துக் குற்றம் மறைந்தது; வாக்கியம் மறைந்தது. மொழி மறைந் தது. உள்ளம் காதல் நிறைந்து இருந்ததுதான் காரணம். பிழைகளே கண்ணுக்குத் தோன்றாதவாறு பார்க்கின்ற இயல்பு அவனுக்கு எங்கிருந்து வந்தது? பரிவு எங்கிருந்து வந்தது? உள்ளத்திலே கலந்த காதலினால் வந்தது.

கையிலே உள்ள ஒரு கடிதம் குற்றமுள்ளதாக இருந்தா லும், அக்குற்றத்தை மறந்து, கடிதத்தைப் போற்றும் தன்மை அக்கடிதத்திற்கு மூலகாரணமான மனையாட்டியின் மேலுள்ள

காதலினலே உண்டாகி விட்டது என்பதை யாவரும் ஒப்புக் கொள்வார்கள். அவர்களிற் சிலர் புராணங்களில் குற்றங் குறைகளைக் கண்டு பிடித்துக் கொண்டிருக்கும் தன்மை, அப்புராணங்களுக்கு மூலமாக உள்ள ஆண்டவனின் மேல் காதல் உண்டாகி விட்டால் மறைந்துவிடும் என்று உணர்வதில்லை. உணர்ந்தால் குற்றங்குறைகளைக் காண்பார்களா? குருட்டு நம்பிக்கை என்று சொல்வார்களா?

**கோயில்**

கண்ணுக்குக் காட்சிப்பொருளாக அலங்காரங்களை எல்லாம் செய்து கொண்டு வெளிவரும் உற்சவ விக்கிரகம் மூல மூர்த்தி அல்ல; ஆனல், மூலமூர்த்தி இருக்கின்ற இடத்தை மறந்த மக்களுக்கு அதனை நினைப்பூட்டுகின்ற ஓர் திருவுருவம் அது. கோயில் என்பதும் இறைவனை நினைப்பூட்டும் இடம். மடைப்பள்ளி என்ற உடனே எப்படி நமக்கு அங்கேயுள்ள சுவை மிக்க உணவு நமது கண் முன்னல் தோன்றுகிறதோ, அது போலக் கோயில் என்று சொன்னவுடன் ஆண்டவன் நினைவு உண்டாகிறது. பல பல நினைவுகளால் சுற்றிச் சுழன்று கொண்டிருக்கின்ற மக்கள் இறைவனை வற்புறுத்தி நினைப்பதற்காக அமைந்திருக்கின்றது கோயில். இறைவனுடைய நினைப்பை உண்டாக்குகின்ற இடமாகக் கோயில் இருப்பதனல் ‘கோயிலிலே இறைவன் இருக்கிருன்’ என்று சொல்லுகிருர்கள். மற்ற இடங்களில் இறைவன் இல்லையா? என்ருல் மற்ற இடங்களிலே இறைவனைப் பார்க்கவோ நினைக்கவோ ஆற்றல் நமக்கு இல்லாமையால் மற்ற இடங்களைக் காட்டிலும் இறைவனுடைய நினைப்பை அதிகமாக உண்டாக்குகின்ற இடம் கோயில் என்று சொல்கிருேம்.

மணிவாசகப் பெருமான் “கோயில் சுடுகாடு” என்று பாடினர். “மயானத்தில் சுவாமி இல்லையே! பூசாரி இல்லையே! அது எப்படிக் கோயில் ஆகும்”? என்று கேட்கலாம். கோயிலுக்குப் போகாத ஒருவன்-சமய உணர்வில்லாதவன்-சாத்திரங்களை அறியாதவன், தன் நண்பன் இறந்து விட்டான் என்று சுடுகாட்டுக்குப் போகிருன். செத்த பிணத்தோடு அவனும் சாகும் பிணமாகச் செல்கிருன். சாத்திரம் படிக்காமலும், தேவாரம் படிக்கா

மலும், இருக்கும் அவனுக்கு அங்கே நிலையாமை தோன்றுகிறது. இறைவனை நினைக்கிறான். இறைவன் நினைவை உண்டாக்கு கின்ற இடம் கோயில் என்றால், எல்லோருக்கும் பொதுவான சாதி-சமயம் கடந்து, எல்லா மக்களும் நிலையாமை என்ற நிலைக் களத்திலே இறைவனுடைய நினைவைப் பெறுகின்ற அந்த இடம் கோயில் அல்லவா? ஆகவே, இறைவனுடைய நினைப்பை எல் லாச் சமயத்தவருக்கும் உண்டாக்குகின்ற சுடுகாட்டை மனிதன் கட்டாத கோயில் என்று சொல்லலாம் அல்லவா?

**இறைவன் நினைப்பு**

புறத்திலே காணுகின்ற காட்சியிலே இறைவனை நினைப்பூட்டு கிற இடம் கோயில். அகத்திலே காணுகிற கருத்துக்களிலே இறை வன் நினைப்பை நன்றாக அழுத்தந் திருத்தமாகப் பதிய வைக் கிறது புராணம். கண்ணுடைய மனிதனுக்கு எப்படி ஆடை அணி களோடு வெளிவருகின்ற உற்சவமூர்த்தி இறைவனுடைய நினைப்பை அதிகமாக உண்டாக்கி, அருளைப் பெறவேண்டும் என்ற பசியை எழுப்புகிறதோ, அப்படியே கருத்து அமைந்த மனிதனுக்கு, சொல்லினால் அமைந்த புராணங்கள், தன்னிடத் திலே உள்ள அலங்காரங்களினால் இறைவனிடத்தில் பக்தியை உண்டாக்கும்.

(தொடரும்)

# அருட்டருவே! ஆட்கொள்வாய்!

திரு. சா. முருகானந்தம் அவர்கள்,
வித்துவான் நிறைநிலை, திருப்பனந்தாள்.

கரங்குவித்துச் சிரங்குனித்துக் குமரா! உன்னைக்
கலைமதியைக் காணுகின்ற கடலைப் போலப்
பரந்தெழுந்த அன்பாலே பணிந்து நின்றேன்
பரம்பொருளே! உனதருளைத் தருவாய் என்று!

வரங்கேட்கும் வறியேனுக் கிரங்கி வந்து
வரையாத வள்ளலாக வாரித் தந்து
குரங்குமனம் கொண்டோனைக் கொட்டிக் கொட்டிக்
குருபரனே! காத்திட்டால் உய்வேன் அன்றோ!

பெருங்கருணைப் பெட்டகமே! பேதை வாழ்வில்
பேரொளியை ஏற்றாது சென்றால் பின்னர்,
வருங்குற்றம் யாவையுமே உன்னைச் சாரும்
வடிவேலா! இதைச்சற்று சிந்திப் பாயா?

அருங்கலைகள் அழியாத செல்வம் வேண்டாம்!
அரசபோகம் ஒருசிறிதும் எனக்கு வேண்டாம்!
தருங்கடவுட் கற்பகமும் வேண்டாம்! உன்றன்
திருவழகைச் சொல்கின்ற திறமே வேண்டும்!

இருள்நீங்கக் கதிரவனின் ஒளிதான் வேண்டும்!
இழிதகைமை முழுவதுமாய் நீங்க; உன்றன்
அருள்ஓங்கி மேன்மேலும் வளர்தல் வேண்டும்!
அருட்டருவே! எனைவிரைந்தாட் கொள்ள வேண்டும்!

# வழிபாடு - திருவடி

சித்தாந்தச்செல்வர்:
**திரு. அ. தா. ப. திருஞானசம்பந்தன் அவர்கள்,**
அழகனகம், திருவண்ணுமலை.

பத்தியின் விளைவினுற்றான் பண்பாடு தோன்றுகின்றது. பண்பாட்டை நாகரீகமென வழைப்பரிலக்கிய சான்றோர். சமயச் செல்வர்களோ வெனின் பண்பாட்டை சமயநெறிகள்-வழிகள்-ஒழுக்கங்கள் என்பர். சமயநெறிக்கு முதன்மையாக வைத் தெண்ணப்படுவது பத்தியேயாகும. பத்தியின் பக்குவமே அடக்கமாந் தன்மைக்கு வழிகோலுகின்றது. அடக்கநிலை தோன்ருதேகினும், அவனடித் தொழும்பராம் நிலையற்றுப் போகிறது. அடக்கத்தின் தன் வயமாகவே பரிபக்குவம் தோன்றி நிலக்கின்றது. பத்தியின் வயமாகப் பக்குவமெய்தும் ஆன்மா, இறைவனிடத்திற்கு அடைக்கலப் பொருளாக மாறு கின்றது. மலச்சேட்டைகளின்றும் நீங்கும் ஆன்மா, பெருமா னின் திருவடிகட்கு அடைக்கலப் பொருளாவதன்றி, அவ் வான்மா வெவ்வாற்ருனும் இறைநிலை பெறுவதின்ரும். இறை வனீன் சாயலிற்படும் நிலை பக்குவப்பட்ட ஆன்மாக்களுக் கென்று முண்டு.

திருவாதவூரடிகளார், எக்காலும் சிந்தையேயாய சிவபதம் அளிக்கும், எம்மான்பால் பத்தியிலவனடித்தொழும்பராக நின்ற வர். அத்தகு அடிகளாரும், தான் எவ்வளவு பத்தி வயத்தானீடு பாடு கொள்ளினும், தனக்த மனப்பக்குவம் தோன்றவுமில்லை; அதனுல் பெமமான் என்னை ஒரு பொருட்டாக மதிக்கவுமில்லை யென்றேங்குகின்ருர். உலகியற் செயல்கள் விடமாட்டே னென்று கட்டுண்டு கிடக்கும் பான்மையில், உள்ளத்திற் ருேன்று மவாவிற்கு வெவ்விதக் குறைவு மின்றி வளர்தலான்,

அவ்வவாவே, எல்லாத் திய செயல்கட்கும் பக்குவப்படுந் தன்மைக்கு விடாது நிறுத்தலான், பெருமானுக்குத் தான் அடைக்கலப் பொருளாக மாறுந்தன்மையிலாது போகின்றதென்கின்ருர் மாணிக்கவாசகப் பெருமான். அவாக்களின்பால் கொள்ளும் பெரும் பற்றறுந்து, அடக்கத்தின் தன்வயத்திற்கு ஆன்மா உட்படுங்காலத்துப் பதமுத்தி யெய்தும் நிலையடையுமென்பது திருவாசகத்தால் போதரு முண்மை.

இறைவன் திருவடிப்பேறு வளிக்கும் தன்மையன்; அவன் திருவடியை மனித வுருவிலும் காட்டும் இயல்பினன்; அடியவர்களுக்கு, சிவனெனும் செம்மேனி யெம்மான்தனித்தும் முத்தியிகின்ருன். அன்றி, அம்மையப்பர் திருக்கோலக்காட்சி கொண்டும் முத்தியின்பமிகின்ருன். உலகில் வாழும் மக்கள் ஆணும்-பெண்ணுமாக வாழ்வதற்குரிய காரணம், இறைவன் அமமை யோடிருக்கும் காரணம் பற்றியதேயாகும், என்பதைச் சித்தியார் பரபக்கம்-பா-47 நன்கு விளக்கந் தருகின்றது.

ஐந்து பூதங்கள் மேவ, புரிகின்ற புணர்ச்சியானது, உடற் காரணமாகுமாதலால், காதற் பிணிப்பால் தோயுண்ட ஆணும்-பெண்ணும், மேவும் புணர்ச்சி காரணமாகின்றது. ஆதிக்காலந் தொட்டு, அநாதி காலம் வரையில் உலகத்தில், ஆணும், பெண்ணுமாக வியைந்து வாழும் காரணம் நாதனுன அங்கயற்கண்ணி யெம்மான், நாயகியாகிய மீநாட்சியம்மையுடன் கூடி நயந்த காரணந்தான் எனச் செப்புகின்றது சித்தியார்.

“ பூதமேவு புணர்ச்சியே புரி,
காயகாரண மாகுமேல்,
காதல் ஆணெடு பெண்ணுமேவு
புணர்ச்சி காரண மாவதென்,
ஆதியே உலகத்தில் ஆணெடு,
பெண்ணு மாயிணை காரியம்,
நாதன் நாயகி யோடு கூடி
நயந்த காரணம் என்பரே ”

*— சித்தியார் - பரபக்கம்-46*

மூவர் முதலிகளான தேவார வாசிரியர்களுக்கெம்மான் அம்மையுடன் சேர்ந்து திருக்கோலக்காட்சி தந்து, ஆட்கொண்

டருளினனென்பதவர்களின் வரலாற்ருேவியத்தின் மூலமும், அவர்கள் தேவாரப் பாக்கள் மூலமும் நன்குணர்கின்ருேம். ஆனுல், மாணிக்கவாசகருக்கோ வெனின், அப்பன் அம்மையப்ப ராக விருந்து, திருக்கோலக்காட்சியினை நல்கியதாக அவர் தம் மணிவாசகத்தின் மூலம் யாண்டும் உணர்கின்ருேமில்லை. மாருக, எம்மான் குருவடிவிற்ருேன்றி, குருந்த மரத்தடியில் ஞானுசிரிய னுகத் திருக்கோலம் பூண்டு குருவருளைத் தந்தருளினன் என்பது திருவாசகத்தான் போதரு முண்மையாகும். மாணிக்கவாசகரும் சிவஞான சத்தி யெய்தப்பெற்றவரே யெனினும், பராசத்தியின் தண்ணருட் கருணைக்குப் பாத்திரமாக விளங்கினுரென்பது அவர்தம் நூலா னுணரு முண்மையாகும்.

ஞானுசிரியனுக விளங்கிய சிவபெருமானும், திருவாதவூரருக்கெளிமையிலடைக்கலம் தரவில்லையென்பதை யன்னுருடைய திருவாசகப் பாக்கள் மூலம் உணர்கின்ருேம். பல்காற்ருேய்ந்து, பத்தியின்பத்திலீடுபாடு கொண்ட வடிகளாரும்,மனப்பக்குவம் எய்தாக் காரணத்தான் அடைக்கலம் பெற முடியாத நிலையிலார்ந்து, மனம் நெக்கு, நெக்குருகக் கசிந்து பாடியுள்ளதை ஈண்டுக் காண்பாம்.

பின் வருகின்ற ‘அடைக்கலப்பத்து’ என்பது திருப்பெருந்துறையிலருளப் பெற்றது; பக்குவம் வரப் பெற்றதாக வெண்ணிய வடிகளார் பதிகம் பாடிய போழ்திலும், எம்பெருமான் அவர்க்கு இரங்கும் தன்மையிலனென்பதைச் சுட்டிக் காட்டுகின்ருர். எல்லா அடியார்களும் எம்மானின் திருவடிக் கமலத்தையடைந்து பேரானந்தத்தில் வீற்றிருக்கவும், தனக்கு மட்டும் அப்பேற்றையளிக்க வில்லையே யென்று மனம் நைந்து பாக்கள் அருளியுள்ளார்.

செழுமை நிறைந்த தாமரை மலர்களின் கூட்டமொத்த நின் சேவடியைச் சார்ந்த, அருள் பழுத்த மனங்கொண்ட அடியர் உன்பாற் போயினர்; பாவியேனுகிய யான்மட்டும் புழுக்கள் நிறைந்து கிடக்கும், புன்மை நிறைந்த உடலுடைய, பொல்லாதவனும்,கல்வியறிவான் பெறுதற்குரிய ஞானம் இல்லாத அழுக்கு மனத்தடியேனையுடையாய்! யான் உன்றன் அடைக்கலப் பொருள்.

செழுக் கமலத்திர ளனநின்
சேவடி சேர்ந் தமைந்த
பழுத்த மனத்தடி யருடன்
போயினர்யான் பாவியேன்,
புழுக்க ணுடைப்புன் குரம்பைப்பொல்
லாக் கல்வி ஞானமிலா
அழுக்கு மனத்தடி யேன்உடை
யாயுன் அடைக்கலமே!

—திருவா-அடை-பா-1

"இன்னு மோர் கருப்பையூர் வாராமைக்கா" என்பது துறந்த வுள்ளத்தினின்றும் தோன்றியவோருறுதிமொழி. பிறவிகள் எடுத்து, எடுத்து, செய்த பாவங்கள் நிறைய; அதனுல் கருப்பையூரிற் சேர்ந்தால், மண்மேற் பிறக்கும் நிலை தோன்றுமாதலால், பிறவியும் வேண்டா நிலைபெறுகிறது. இதையே மணிவாசகரும் வலியுறுத்துகின்ருர்.

உலகில் வாழும் நல்லவர்கள் விருப்பப்படாத, வேண்டா வெறுப்பான செயல்களைச் செய்வதிலேயே வுழலும் சிறுமையைப் பெருமானே நின்பெருமையினுற் பொறுப்பவனே! பாம்பைப் பூண்பவனே! பொங்கிப் பிரவாகமாக எழும் கங்கையையடக்குபவனே! நின்னுடைய திருவருளால் என்னுடைய பிறவியை வேர் அறுப்பவனே! உடையவனே! அடியேன் நின்தன் அடைக்கலப்பொருள்!

வெறுப்பன வேசெய்யு மென்சிறு
மையைநின் பெருமை யினுல்,
பொறுப்பவனே யராப் பூண்பவ
னேபொங்கு கங்கை சடைச்
செறுப்பவனே நின்றிருவரு
ளாலென் பிறவியை வேர்
அறுப்பவனே யுடையாய் அடி
யேனுன் அடைக்கலமே!

— திருவா - அடை - 2

தேவர்களுக்கெல்லாம் தேவாதிதேவனுக விளங்கி நிற்கும் பெரும் பெருமானுன சிவபெருமான், பிறவியை வேரறுத்துப் பெரும் பித்தினைத் தோற்றுவிக்கும் பெருமான், சதுரப்பாடு

டைய பெருமான், என்னுள்ளத்தினுள்ளே எழுந்தருள வரும் பெருமான், மலவரனுகிய அயனும், நெடியோனுகிய மாலும் அறிய வெண்ணு நிலையில் நின்ற பெருமானே உடையாய்! அடியேன் உன்றன் அடைக்கலப் பொருள்!

பெரும்பெரு மானென் பிறவியை
வேரறுத்துப் பெரும் பிச்சுத்
தரும்பெரு மான்சது ரப்பெரு
மான்என் மனத்தினுள்ளே,
வரும் பெருமான் மலரோன் நெடு
மாலறி யாமனின்ற
அரும்பெரு மானுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே! — *திருவா-அடை-3*

துன்ப மழை பொழிகின்றதால் தோன்றும் புயல் வெள்ளத் தினின்றும், திருவடியாகிய புணையைக்கொண்டு, அன்பர்கள் எல்லாம் கரையேறினர்; வீட்டுலக மெய்தினர். துன்பக்கடல் வாய்ச் சுழியிலகப்பட்டு, பெண்களின் காமவலேகளால் தாக் குண்டு, காமமாகின்ற சுறுமீன்களால் எதிர்க்கப்பட்டு, யான் அழிகின்றனன்; உடையாய்! அடியேன் நின்னடைக்கலப் பொருள்!

பொழிகின்ற துன்பப் புயல்வெள்
ளத்தினின் கழற்புணை கொண்,
டிழிகின்ற அன்பர்க ளேறினர்,
வான்யா னிடர்க் கடல்வாய்ச்
சுழிசென்று மாதர்த் திரைபொரக்
காமச் சுறவெறிய,
அழிகின்ற னன்உடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே! —*திருவா - அடை - 4*

சுருண்ட மயிருடைய பெண்கள் கூட்டச் சூழலிற் பட்டுன், தேரிய திறனறிந்து, இங்கு இருள்புரிந்து நச்சரிக்கும் உடலு டனே கிடந்து அலமந்தேன்; மைபூசப் பெற்ற பெரிய கண்ணு டன், அச்சம் நிறைந்த மான் போன்ற நோக்கினளான உமை யம்மையின் விண்ணோர் பெருமான்! அருள் புரியாய்! உடைய வனே! அடியேனுன்னுடைய வடைக்கலப் பொருள்!

சுருள்புரி கூழையர் சூழலிற்
பட்டுன் திறமறந்திங்,
கிருள்புரி யாக்கையி லேகிடந்
தெய்த்தனன் மைத்தடங்கண்
வெருள்புரி மானன்ன நோக்கிதன்
பங்கவிண் ணோர் பெருமான்
அருள்புரி யாயுடை யாய் அடி
யேனுன் அடைக்கலமே! —திருவா-அடை-5

மாவடு போன்றதும், மைதிட்டப் பெற்றதுமான பெண்களின் வன்மை பொருந்திய மத்தையிட, உடைந்து, தயிர், பானையைப் பரவும் தயிரே போன்று, தளர்ந்தேன் யான்; எடுப்பான மலர் போன்ற திருப்பாதங்கள் நீடு வாழ்க! எப்போது வந்து, எந்நாளில் நின்னை வணங்குவன் கொடிய வினையேன் ஆகிய யான்! கடல் போன்ற அப்பனே! உடையவனே! அடியேன்உன் அடைக்கலமே!

மாழைமைப் பாவிய கண்ணியர்,
வன்மத்திட வுடைந்து,
தாழியைப் பாவு தயிர் போல்,
தளர்ந்தேன் தடமலர்த்தாள்
வாழியெப் போதுவந் தெந்நாள்,
வணங்குவன் வல்வினையேன்,
ஆழியப்பா வுடையாய் அடி
யேனுன் அடைக்கலமே! —திருவா-அடை.6

மின்னுகின்ற கண்களால் பிறரை யரைந்து வீழ்த்தும் இடையை யுடையாருடைய, கோபமாகிய வலையில் அகப்பட்டுப் புல்லிய நெறிகளிற் புரள்வேனைப், புரளாமற் புகுந்தருளி என் கண்ணிலே அமுதம் ஊறித் தித்தித்து, என் பிழைக்கு இரங்கும் அழகிய கண்களையுடையவனே! உடையவனே! அடியேன் உன் அடைக்கலப் பொருள்!

மின்கணினுர் நுடங்கு மிடையார்,
வெகுளி வலையி லகப்பட்டுப்
புன் கணனுய்ப் புரள் வேனைப்
புரளாமற் புகுந்தருளி

என் கணி லேயமு தூறித்தித்
தித் தென் பிழைக் கிரங்கும்,
அங்கண னேயுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே! —திருவா-அடை-7

மாம்பிஞ்சு பிளந்தது போன்ற கண்களையுடையளான வுமா தேவியாரின் பங்கனான சிவபெருமானே! உன்னுடைய மலரடி களுக்கு, பாவு நெய்யப்படுங் காலத்துத், தறியின் மறைவிலிழை சேர்க்கும் குழையோடுமாப்போல், மறைந்து நிற்கும் என்னுள் ளம் மிகப் பெரியது; நீயென்னை கூவிடச் செய்வாய்! கும்பிக்கே யுணவைத் தேடியிடச் செய்வாய்! பசு ஞானம் அற்றுக்கெடு வேன்! உடையவனே! அடியேன் உன் அடைக்கலமே!

மாவடு வகிரன்ன கண்ணிபங்
காநின் மலரடிக்கே
கூவிடுவாய் கும்பிக்கேயிடு
வாய் நின் குறிப்பறியேன்
பாவிடை யாடு குழல் போற்
கரந்து பரந்த துள்ளம்,
ஆகெடுவே னுடையாய் அடி
யேனுன் அடைக்கலமே! —திருவா-அடை-8

உலகியற் சூழலிற்பத்தியைத் தவிர பிறவெவற்றையும் அறியா அன்பர்கள், நின்னருள் பொழிகின்ற, கழலணிந்த திருத்தாள்களின் கீழ், என்றும் நீங்காது நிலை பெற்ற செல்வம் வந்து பெற்றார்! உன்னை வழிபடுதற்குரிய துறை அறியேன்! நின்னையே நானறியேன்; நின்னையே அறியும் அறிவை அறி யாதவனுக்குடையாய்! அடியவனே! நின்னுடைய தாளுக்கு அடைக்கலப் பொருள்!

பிறிவறி யாஅன்பர் நின்னருட்
பெய்கழற் றாளி ணைக்கீழ்
மறிவறி யாச் செல்வம் வந்துபெற்
றா ருன்னை வந்திப்பதோர்
நெறியறியே னின்னையே யறி,
யேனின்னையே யறியும்,
அறிவறியே னுடையாய் அடி
யேனுன் அடைக்கலமே! —திருவா-அடை-9

பெருமானே! வழங்குகின்ருய் உன் அடியவர்களுக்கு, அருள் நிறைந்த வமுதத்தை; அவ்வமுதத்தை யிருகைகளானும் வாரி விழுங்குகின்றேன்; அங்ஙனம் விழுங்கியக்கால் விக்கினேன்; வல்வினையால் உந்தப் பெற்றயான், விதியின்மையால், முழுங்குதற்குத்தேனன்ன தண்ணீர் பருகத் தந்து உய்யக் கொள்ளாய்! வருந்துகின்றேன்! உடையவனே அடியேன் உன் அடைக்கலமே!

வெகு காலமாக அமுதத்தை யருளுடன் குழையப் பெற்று உண்ண வேண்டும் என்று ஆசைப்பட்ட மணிவாசகர் பெருமானுக்குக் கிடைத்தற்கரிய வொரு பெரும் பொருளைக் கண்டவுடன் அவாவின் காரணமாக நிலை கலந்து உண்டதால், விக்கிக் கொண்ட தென்பதையவர் திருவாசகப் பாமூலம் உணர்கின்ருேம். விக்கிக் கொண்ட போழ்திலும் அமிழ்தம் உட்சென்று நிறைந்த தென்பதை யறிகின்ருேம்.

வழங்கு கின்ருய்க்குன் னருளா
ரமுதத்தை வாரிக் கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை
யே னென் விதியின் மையால்,
தழங்கருந் தேனன்ன தண்ணீர்
பருகத்தந் துய்யக் கொள்ளாய்!
அழுங்குகின் றேனுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே! —திருவா-அடை-10

---

## திருவாசகச் சிறப்பு

தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
அல்லலறுத் தானந்தம் ஆக்கியதே—எல்லை
மருவா நெறிஅளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகம்என் றும் தேன்.

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## திருவுந்தியார்

இனி, திருவுந்தியாராவான:- முற்பதிகத்தில் அருளிய சிவார்ச்சனையான் வந்த சிவானந்தம் மேலீட்டால் அங்கங்களிற் பாவ, சின்னம் வெளிப்பட, அதன் முறைமையை விளங்கச் சொல்லுமிடத்துப் பரமசிவன் சுத்த பஞ்சகிர்த்தியப் பெருக்கால் வெற்றி பெற்ற சிவானந்த யோக விளைவைத் திருவருண் மொழியாகத் திரும்பத் திரும்பப் புதிது புதிதாகவே சொல்லிச் சொல்லிப் பெருங்கருணையை இன்பாதீதமாக விளையாடின விளையாட்டைத் திருவருளநுபவமாகக் காண்க.

இப்பதிகப்பாக் கலித்தாழிசையாகத் திருத்தில்லையிலோதிய தெனக் காண்க.

இனி, திரிபுர மும்மல தகனஞ் செய்த (தி. – ன.):—

வளைந்தது வில்லுவிளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற
ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற.

வளைந்தது............உந்தீபற :—

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை–திருவான்மியூர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத்தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 13/- ஷை நூல் நிலையத்தில் கிடைக்கும், 20% கழிவு உண்டு.

(இ - ள்). ஞானப்பெண்ணே! கேள்! நமது பரமசிவன் எல்லாத் தேவர்களும் திருவருட் பணியாக அடிமையேயென நிற்ப, சுவாமி திருக்கை வில் வளைந்ததே; விளைந்ததே பேரொலி; உடனே முக்கோட்டையிலுள்ளோரின் பேரொலியும்கூடிப் பெரிய சத்தமாயிற்றே! அவை கண்டு உந்தி பற! அடி ஞானப் பெண்ணே!

ஒருங்குடன்...........உந்திபற :—

(இ.-ள்). கேளடி! ஞானத்தாயே! நமது பரமசிவன் திரு நோக்கமானவுடன், திருமுறுவல் திருவருளால் அடங்கலு மெரியக் கண்டோமடி! எவ்வாறெனின், இடை பிங்கலை வளைய, சுழிமுனை மார்க்க சிவயோக வீதியிற் சமாதி கூடி, மும்மலம் எரிய, சிவயோக ஆனந்த வமிர்தம் பெருகிற்று, எனக் காண்க.

---

## வீரட்டானம் எட்டு

பூமன் சிரங்கண்டி; அந்தகன் கோவல்; புரம் அதிகை
மாமன் பறியல்; சலந்தரன் விற்குடி; மாவழுவூர்;

காமன் குறுக்கை; யமன்கட வூர்இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே.

1. திருக்கண்டியூர் – பிரமனது சிரம் கொய்த தலம்.
2. திருக்கோவலூர் – அந்தகாசூரனைக் கொன்ற தலம்.
3. திருவதிகை – திரிபுரத்தை எரித்த தலம்.
4. திருப்பறியலூர் – தக்கன் சிரசைத் தடிந்த தலம்.
5. விற்குடி – சலந்தரனைத் தலையரிந்த தலம்.
6. திருவழுவூர் – யானையை யுரித்த தலம்.
7. திருக்குறுக்கை – மன்மதனை எரித்த தலம்.
8. திருக்கடவூர் – இயமனை உதைத்த தலம்.

திருவருட் பிரகாச வள்ளலா ரென்னும்
சிதம்பர இராமலிங்க சுவாமிகளியற்றிய

# திருவருட்பா

## திருமுகப் பகுதி

---

திரு. ஆ. பாலகிருஷ்ண பிள்ளை அவர்கள், பி. ஏ., எம். எல்., அட்வோகேட்
பதிப்பு 5-ஆம் புத்தகம்.

---

தொகுத்தவர், திரு. பி. பி. துரைசாமிஐயா அவர்கள்.
கோயமுத்தூர்.

---

திருச்சிற்றம்பலம்

## சிறப்புப் பாயிரம்

மாம்பாக்கம் குருகுலத் தலைவர் – தவமுனிவர்
அருள்திருவாளர், இளவழகனுர் அவர்கள் கூறும் ஆசி,

### 1. சன்மார்க்கப்பணி

1. திருவருட் செல்வர்:— 'திருவருட் பிரகாச வள்ளலார்' என்னும் இராமலிங்க அடிகளார், சென்ற நூற்ருண்டின் திருவருட் செல்வர்! தமிழ்நாடு இன்றுந் தவமுடையது என்பதற்கு, இப்பெருமானுர் திருவருகை ஓர் அடையாளம்! இளமையிலிருந்தே மெய்யுணர்வு அவர் திருவுள்ளத்தில் மலர்ந்து விரிந்து பரந்தது. தூய உண்மை யறிவின்ப நிலையையே நேராய் நாடியது. விறுவிறு என்று இணையற்ற உச்சியிற் பறந்தது. அல்லாத நிலையில் உழலும் உயிரினங்களின் மேல் உருக்க வுணர்ச்சி பெருக்கெடுத்தது. உயிரிரக்கம் (ஜீவகாருணியம்) பெருகப் பெருக அந்த மெய்ப்பொருள் நாட்டம் (சன்மார்க்கம்) முறுகி முறுகி வலுத்தது. போலிப்பொய்ம்மைகள் கீழே விலகி வீழ்ந்தன.

எது இணையற்ற இயற்கை யுண்மையோ, இணையற்ற இயற்கை விளக்கமோ, இணையற்ற இயற்கை இன்பமோ அந்தத்

தூய சச்சிதாநந்தத்தை அடிகளார் உள்ளம் பற்றிக்கொண்டது சன்மார்க்கமே வள்ளலார் நடையுடை பாவனைகளாயிற்று. அதுவே, உயிரிரக்க வுருவில், எளிய இனிய திருவருட்பாக் களாய், சீர்திருத்த உரைகளாய், புனிதத் திருமுகங்களாய் வடலூர்த் திருப்பணிகளாய் ஒரே முழுமுதற் கடவுள்பால் உருகி யுருகி உரைத்த விண்ணப்பங்களாய் வீசி வீசிப் பொழிந்தது. மற்றைச் செயற்கைகள் அவரைவிட்டுத் தாமே நழுவின.

2. திரு அருட்பாப் பதிப்பு:— ஒரே கடவுள் நோக்கமும், தூய உயிரிரக்கத் தொண்டும் பெறுதல். ஈடு இணை அற்ற மிகப் பெரிய உயர் நிலைகள்! வள்ளலார் இவற்றை யன்றி வேறு அறியார்.

(தொடரும்)

---

## ஒருவர் மட்டும் பாடிய பண்கள்

(அ) ஞானசம்பந்தர்

1. வியாழக்குறிஞ்சிப்பண்
2. மேகராகக் குறிஞ்சிப்பண்
3. யாழ்முரிப்பண்
4. செவ்வழிப்பண்
5. அந்தாளிக் குறிஞ்சிப்பண்

(ஆ) திருநாவுக்கரசர்

1. திருநேரிசை
2. திருவிருத்தம்
3. திருக்குறுந்தொகை
4. திருத்தாண்டகம்

(இ) சுந்தரர்

1. செந்துருத்திப்பண்

## சுந்தர மூர்த்தி சுவாமிகளின்
# அற்புதத் திருப்பதிகங்கள்
## Hymns of St. Sundarar

திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள், M. A.,
தமிழ் விரிவுரையாளர்,
காசி இந்துப்பல்கலைக்கழகம், காசி.

---

### Tiruttondattogai.

திருத்தொண்டத்தொகை: பண்: கொல்லிக்கௌவாணம்

கறைக்கண்டன் கழலடியே காப்புக் கொண்டிருந்த
கணம்புல்ல நம்பிக்கும் காரிக்கும் அடியேன்
நிறைக்கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்
துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றும் சோதித்
தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவார்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

I serve Kanampulla Nambi, who had the Holy Feet of Siva as his guard, and Kari Nayanar.

I am the servant of the devotees of Nedumara Nayanar, who won the battle at Nelveli, and St. Vayilar of Mayilai.

And the slave of Munaiyaduvar, the warrior, am I the servant of the Lord at Arur.

(To be continued)

உ

சிவ சிவ

# திருப்பாண்டிக்கொடுமுடியில்
# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள்
## அன்னம் பாலிப்பு நிதி ரூ. 3,000/-

திருநெறிய மெய்ஞ்ஞானத் தமிழ் மூவராலும் அருளப் பெற்றதும், கொங்கு நாட்டுப் பாடல்பெற்ற தலங்களுள் ஒன்றாயதும்,

'எண்ணமருங் குணத்தார்,
பண்ணமர் பாடலினார்,
கணிமாமலர் கொண்டு தாடொழு வார்அவர்தங்கள்
வினைப்பகையாயின தீர்க்கும் விண்ணவர்,
நினைத்தெழுவார் துயர் தீர்ப்பார்,
மறைவளர் பாடலினோடு மண்முழவம் குழல் மொந்தை
பறைவளர் பாடலினார்,
போகமும் இன்பமும் ஆகிப் போற்றியென் பார்அவர் தங்கள்
ஆகமும் உறைவிடமாக அமர்ந்தவர்,
சித்தரும் தேவரும் கூடிச் செழுமலர் நல்லன கொண்டு
பத்தர்கள் தாம்பணிந் தேத்தும் பாண்டிக்கொடுமுடி'

என்று ஞானசம்பந்தராலும்,

'பாண்டிக்கொடுமுடி நட்டனைத் தொழநம்வினை நாசமே,
பாண்டிக்கொடுமுடி கருமமாகத் தொழு மடநெஞ்சமே,
திருக்கொடும்முடி என்றலும் தீவினைக்
கருக்கெடும் இதுகைகண்ட யோகமே'

என்று திருநாவுக்கரசரும்,

'கற்றவர் தொழுதேத்துஞ்சீர்க் கறையூரிற் பாண்டிக் கொடுமுடி
காவிரி வட்டவாசிகை கொண்டடி தொழுதேத்து பாண்டிக் கொடு
நல்லவர் தொழுதேத்துஞ்சீர்க் கறையூரிற்பாண்டிக் கொடுமுடி' [முடி,

என்று சுந்தரரும் பாடிய பெருமையுடையதும்,

'உனை நான் மறக்கினும் சொல்லுநா நமச்சிவாயவே' என்று ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் அருளியமையால் 'நமச்சிவாயத் திருப்பதிகம்' என்று அப்பதிகம் வழங்கப்பெறுவதும் ஆன கொடுமுடி எனும் தலத்தில், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சிவப்பேறு எய்திய திருநாள் ஆகிய வைகாசி அமர பக்ஷம் திருதியையில், அந்தணர் அருந்தவர் ஏழைகளுக்கு அன்னம் பாலித்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இந்நிதி நிறுவப்பெற்றது. இது 'திருப்பாண்டிக் கொடுமுடியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு நிதி' எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 3000/- ரூபா மூவாயிரம். இது ஆண்டொன்றுக்கு 7-1/2% வட்டி தரக்கூடிய நிலையான முதலீடாகக் கும்பகோணம் கானரா பாங்கில் முதலீடு செய்யப் பெற்றுள்ளது. எண். 489029— 4—6—66 — 120 மாதங்கள் ரூ. 3000/- இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப்பெற்று வரும்.

| | | |
|---|---|---|
| 3. இராமேசுவரம் | கன்னியாகுமரி | திருச்செந்தூர் |
| ஸ்ரீவைகுண்டம் | திருநெல்வேலி | பழையபாவநாசம் |
| திருக்குற்றாலம் | உத்தரகோசமங்கை | திருப்பெருந்துறை |
| மதுரை | பழனி | விராலிமலை |
| திருவானைக்கா | திருவையாறு | சுவாமிமலை |
| திருவிடைமருதூர் | திருப்பனந்தாள் | வேதாரண்யம் |
| திருப்புகலூர் | திருவாரூர் | திருநாகைக்காரோணம் |
| திருநள்ளாறு | காவிரிப்பூம்பட்டினம் | ஆக்கூர் |
| மாயூரம் | வைத்தீசுவரன்கோவில் | சீர்காழி |
| ஆச்சாள்புரம் | சிதம்பரம் | திருப்பாதிரிப்புலியூர் |
| விருத்தாசலம் | திருக்கோவலூர் | திருவண்ணாமலை |
| திருமாகறல் | காஞ்சீபுரம் | திருக்கழுக்குன்றம் |
| சென்னை | திருவொற்றியூர் | வடதிருவாலங்காடு |
| திருத்தணிகை | காளஹஸ்தி | பிரயாகை |
| வாரணசி | டில்லி | ஹரத்துவார் |
| ரிஷிகேசம் | திருக்கேதாரம் | ஆகிய 47 தலங்களில் |

நம்மால் மூலதனங்கள் நிறுவப்பெற்று, ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாளில், ஆண்டுதோறும் நம்மால் அன்னம் பாலிப்பு நிகழ்த்தப்பெறுகின்றது. அங்ஙனமே இம் முதற் பொருளினின்று ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டித் தொகையில் நிர்வாகச் செலவு போக எஞ்சியுள்ள தொகை முழுவதும், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சிவப்பேறு எய்திய வைகாசி அமர பக்ஷம் திருதியை நாளில், திருப்பாண்டிக்கொடுமுடி யாகிய கொடுமுடி என்னும் தலத்தில், ஆண்டுதோறும், அந்தணர் அருந்தவர் ஏழைகளுக்கு அன்னம்பாலிக்கச் செலவு செய்யப் பெறும்.

4. ஆண்டுதோறும் வட்டி வரவுக்கேற்பவும் காலநிலைக்கு ஏற்பவும் நம்மால் தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவின்படி ஷை அன்னம்பாலிப்பு நடத்தப்பெற்று வரும்.

5. இவ்வட்டி வருமானம் வேறு எம்முறையிலும் பயன் படுத்தப்பெறமாட்டாது. இம்முதற்பொருள் திரும்பப்பெற்றதும் அதிக வட்டி தரக்கூடிய முதலீடுகளில் முதலீடு செய்யப்பெறும். இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும்.

திருப்பனந்தாள்,<br>7-6-1966. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

---

*திருவிடைமருதூர் சப்-ரிஜிஸ்டிரார் ஆபிஸில் 4-ம் புத்தகம், 53-வது வால்யூம், 155 முதல் 158 வரை பக்கங்களில் 1966-வது வருஷத்திய 29- நம்பராக ரிஜிஸ்தர் செய்யப்பட்டது. 1966-ம் வருஷம் ஜுன் மாதம் 8-ம் தேதி.*